


# தரத்தை மதிப்பீராயின், தரும் விலைக்குத் தக்க மதிப்பைத் தருவது ரெக்ஸ்!

எங்கள் ஸ்க்வாஷ்கள், சேர்த்தியிலும் சேர்த்தியானவை யாகப் பார்த்துப் பார்த்துப் பறித்த பழங்களிலிருந்து தயாரிக்கப்பட்டவை. பிறகு, தெள்ளிய தூய சீனிப் பாகும் வேறு பல விசேஷச் சரக்குகளும் சேர்க்கப்பட்டவை. எனவே, சுவைத்தறியாப் புத்துணர்ச்சி தரும் பான மாக உங்களை அடைகிறது ரெக்ஸ்.




கார்ன் பிராடக்ட்ஸ் கம்பெனி (இந்தியா) பிரைவேட் லிமிடெட்,  பம்பாய்-1.

*Bensons 1966A-TM*

# புதிய மர்பி

ஸூபர் டிரான்ஸிஸ்டர்

## முஸாபிர்

மாடல் டிபி 0820







விலை ரூ 328. 00 மட்டுமே
எக்சைஸ் தீர்வை மட்டுமே உள்ளிட்டது.
விற்பனைவரி மற்றும் இதர ஸ்தல வரிகள்
தனி. (பாட்டரி விலை யும் தனியே.)

காணக்காண எழில் கொஞ்சும் முஸாபிர், டிரான்ஸிஸ்டர் அழகுப் போட்டியில் அனுயாசமாக வெற்றி பெற்றுவிடும். மெலிந்த, ஆனல் மிக அடக்கமான காபினெட் ! நீங்கள் விரும்பும் எந்த நிலையத்தையும் சரியாக இணைத்துக் கொள்ளலாம். கண்டதுமே நீங்கள் முஸாபிர் மீது காதல் கொண்டு விடுவீர்கள் !

**புதிய மர்பி ஸூபர் டிரான்ஸிஸ்டரின் அம்சங்கள்:**

- 8 டிரான்ஸிஸ்டர்கள், டயோடு. 3 பான்டு-ஆல் வேவ்
- விசேஷமான டேனிஷ் ஸில்வர் ரிப்ளெக்டர்
- டெலிஸ்கோபிக் ஆக்தெனுமற்றும் உட்பொருத்தப்பட்ட ஃபர்ரைட் ஏரியல்
- பளிங்குத் தெளிவுடன் தத்ரூபமான ஒலி நயம்

**மர்பி முஸாபிர்** இன்றே காணுங்கள்
இன்றே உங்கள் அருகமைந்த மர்பி
வியாபாரியிடம் காணுங்கள்



**murphy** மர்பி இல்லத்தை மகிழ்விக்கிறது!

NAS-18




## ஆப்கன் ஸ்னோ அழகு சாதனங்கள்
## எல்லா வயதினருக்கும் மிகச் சிறந்தது

சத்து மிகுந்த மூலப்பொருள்களால் விசேஷமாகத் தயாரிக்கப்பட்ட ஆப்கன் ஸ்னோ, மேனியை இயற்கையாகவே மழமழப்பாகவும் சுருக்கம் விழாமலும் பாதுகாக்கிறது. உங்கள் மேனி மிருதுவாகவும், பிரகாச மாகவும் இருக்க உதவுகிறது. நாள் முழுதும் நீடித்த அழகுடன் இருப்பதோடு மேனி இயற்கையான பொலிவோடு விளங்குகிறது.

ஆப்கன் முகப் பவுடர், க்ரீம், லிப்ஸ்டிக் உங்களுக்குப் பிடித்தமான கலர்களில் கிடைக்கும். ஆப்கன் நகப் பாலிஷ் உங்கள் கைகளுக்கு ஒரு புதிய அழகை உண்டாக்குகிறது.

## ஆப்கன் ஸ்னோ அழகு சாதனங்கள்



ஈ. எஸ். படான்வாலா, பம்பாய்-77 (இந்தியா)

# கல்கி

## பொருளடக்கம்

பிலவங்க பங்குனி 25 - ஏப்ரல் 7



(படவிளக்கம் 8ம் பக்கம்)

கல்கியில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.





தமிழ்த்திருநாடு தன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்



மலர் 27 □ இதழ் 36

# மஸானியின் தெளிவுரை

**ப**ட்ஜட் விவாதத்தின்போது நாட்டின் பொருளாதாரச் சீர்குலைவையும், அதைத் திருத்துவதற்கு உருப்படியான திட்டங்கள் நிதிமந்திரி செய்யத் தவறியிருப்பதையும், என்ன செய்தால் நிலைமை சீர்திருந்தும் என்பதற்கான யோசனைகளையும் மக்கள் சபையில் திரு மஸானி அவர்கள் எடுத்துரைத்தார்.

ஏற்கெனவே 1961 முதல் 67 வரை 782 கோடிக்கு மேல் காகிதப் பணத்தை நாட்டில் மத்திய அரசாங்கம் புழங்க விட்டிருக்கிறது. அத்துடன் சென்ற ஆண்டும் இவ்வாண்டுக்குமாகச் சேர்ந்து 590 கோடிக்குக் காகிதப் பணம் புழங்க விட வழி வகுத்திருக்கிறார்கள். அதாவது மொத்தம் ரூ. 1,200 கோடிக்கு மேல் ஆகிறது.

மூன்றாவது திட்ட நகலைத் தயாரித்த திட்டக் கமிஷன் அந்தத் திட்ட காலத்துக்குள் ரூபாய் 550 கோடிக்கு வேண்டுமானால் நோட்டுக்கள் அச்சடித்துப் புழங்கலாம் என்று கூறிற்று.

மூன்றாவது ஐந்தாண்டு திட்ட காலம் முடிந்து, நான்காவது திட்டம் வகுக்க முடியாமல் தேசம் மிகவும் பண நெருக்கடியில் சிக்கியுள்ள இச்சமயம் மிகவும் எச்சரிக்கையாக இருக்க வேண்டிய காலமாகும்.

ஆனால் சென்ற ஆண்டு 300 கோடியும் இந்த ஆண்டு 290 கோடிக்கும் நோட்டு அச்சடித்துப் புழங்க பட்ஜட் வகுத்தாகி விட்டது. அதாவது ஐந்தாண்டு காலத்தில் பரவலாகச் செய்யலாம் என்று கூறப்பட்டதை இரண்டே ஆண்டுகளில் திட்டக் கமிஷன் குறித்த தொகைக்கு மேலே நோட்டுக்களை அச்சடித்துப் புழங்கத் தலைப்பட்டு விட்டது அரசாங்கம். இதன் விளைவாக நமது பொருளாதாரம் பெரிதும் பாதிக்கப்படப் போகிறது. விலைவாசிகள் ஏகத்தாறாக உயர்ந்து ஏழை மக்கள் திணறப் போகிறார்கள் என்கிறார் மஸானி. அது மட்டுமல்ல, இன்றைய மத்திய ஆட்சி, எப்படி டம்பாச்சாரித்தனமாக நிர்வாகச் செலவு செய்து வருகிறது என்பதையும் திரு மஸானி எடுத்துக் காட்டியிருக்கிறார்.

திட்டங்கள் எல்லாம் படுதோல்வி அடைந்து, இப்பொழுது திட்ட ஓய்வுள்ள காலம் என்று பெயர். திட்டக் கமிஷன் காரியாலயம் உபரியான ஓர் அமைப்புத்தான்; வீணான அமைப்பு என்றுகூடச் சொல்லலாம். இந்த நிலையில் திட்டக் கமிஷன் காரியாலயப் பியூன்களின் எண்ணிக்கையை 224லிருந்து 290 ஆக உயர்த்தியிருக்கிறார்கள். குமாஸ்தாக்களையும் மற்ற அதிகாரிகளையும் 557லிருந்து 1041 ஆக உயர்த்தியிருக்கிறார் நிதி மந்திரி. இது எவ்வளவு வீண் விரயச் செலவு! நேர்முகமாகவும் மறைமுகமாகவும் ரயில் கட்டணங்களை உயர்த்தியும் தபால் கட்டணங்களை உயர்த்தியும் ஏழை மக்களைக் கசக்கிப் பிழிந்தும் சேகரிக்கும் வரிப்பணம் எப்படி ஒரு வேலையும் செய்யாத சர்க்கார் இலாகாவுக்குக் கொட்டி அழப்படுகிறது என்பதைத் திரு மஸானி சுட்டிக் காட்டியிருக்கிறார். இப்படிப் பல சர்க்கார் காரியாலயங்களில் கோடிக் கணக்கில் ரூபாய் எவ்விதப் பயனுமின்றிச் செலவழிக்கப்படுகிறது! இவற்றையெல்லாம் குறைத்தாலே மக்களிடம் இவ்வளவு வரி விதித்துப் பணம் திரட்ட வேண்டியிராது.

எத்தனையோ சர்க்கார் தொழிற்கூடங்கள் நஷ்டத்தில் இயங்கி வருகின்றன. அவற்றை விவரம் தெரிந்த, தொழில் வளர்ச்சியில் அக்கறையும் அனுபவமும் அடைந்த தொழில் பிரமுகர்களிடம் ஒப்படைத்தால் லாபகரமாக இயக்குவார்கள். அதற்கு மாறாக இன்னும் 400 கோடி அதில் கொட்ட பட்ஜெட் வழி வகுக்கும் பேதைமையையும் சுட்டிக் காட்டியிருக்கிறார் மஸானி.

'66ம் ஆண்டு ரூபாயின் மதிப்பைக் குறைத்தபோது பிரதம மந்திரியின் அழைப்பின் பேரில் அவ்வாண்டு ஜூன் மாதம் அவரைச் சந்திக்கச் சென்ற மஸானியும் ஆசாரிய ரங்காவும், உடனடியாகச் செய்யவேண்டிய நடவடிக்

கைகள் என்னவென்பதை எட்டு அம்சத் திட்டமாக எழுதிக்கொண்டு போய், நேர்முகமாக விளக்கிச் சொல்லிவிட்டு வந்தார்கள். அதில் ஒன்று ஏற்றுமதி வரியை உடனடியாகப் பெருமளவு குறைக்க வேண்டும்; அல்லது ரத்து செய்ய வேண்டும் என்று கூறியிருந்தார்கள். அதை இரண்டு ஆண்டுகள் கழித்து, நாட்டுக்குப் பெருநஷ்டம் ஏற்பட்ட பிறகு செய்திருக்கிறார்கள். இன்னும் ஏழு அம்சம் பாக்கி இருக்கிறது. ரூபாய் மதிப்புக் குறைப்பினால் விளைய வேண்டிய நன்மை நாட்டுக்கு விளையாமலே போய் விட்டது.

இப்படித் தங்களுக்காகவும் தெரியாது, சொன்னாலும் தெரியாது என்ற கணக்கில் இன்றைய பாரத அரசாங்கத்தின் நிர்வாகப் பொறுப்பிலுள்ளவர்கள் இருக்கிறார்கள்.

# என்ன சேதி?

## ராஜ்ய சபைக்கு ஒரு ரத்தினம்

மீண்டும் பேராசிரியர் எம். ரத்தினசுவாமி அவர்களை ராஜ்யசபைக்குத் தேர்ந்தெடுத்து அனுப்பியதற்குச் சென்னை சட்டசபையைத் தேசமெங்கிலுமுள்ள சுதந்திரக் கட்சி அங்கத்தினர்களும் அன்பர்களும் பாராட்டுவார்கள். ராஜ்ய சபை என்பது ஆழ்ந்த அறிவும் அமைதியான சிந்தனையுமுள்ள பெரியோர்கள் கொண்ட சபையாக விளங்கவேண்டும் என்பது மரபு. அதற்கு எல்லாவிதத்திலும் பொருத்தமானவர் பேராசிரியர் ரத்தினசுவாமி.

தமிழ் நாட்டில் எல்லா வகுப்பையும் சார்ந்த மக்களின் மதிப்பைப் பெற்றவர். அகில இந்தியாவிலும் நன்கு அறிமுகமானவர். அவர் சென்ற ஆறு ஆண்டுகளில் ராஜ்ய சபையில் அச்சபையின் கௌரவமும் தமிழகத்தின் பண்பாடும் சிறக்கும் வகையில் பணியாற்றியிருக்கிறார். வருகிற ஆண்டுகளிலும் அவரது தெளிவான யோசனைகள் ராஜ்ய சபை வாயிலாக அரசாங்கத்துக்கும் புறம்பே சுதந்திரக் கட்சிக்கும் தில்லியில் கிடைத்து வரும்.

## திரு சா. கணேசன்

சென்னை மேல் சபைக்குத் தமிழக சுதந்திரக் கட்சித் தலைவர் திரு சா. கணேசன் தேர்ந்தெடுக்கப்பட்டிருப்பது வரவேற்கவேண்டியதொரு செய்தியாகும். திரு சா. கணேசன் அவர்கள் பொது வாழ்வில் தன்னலமற்றுப் பணியாற்றி மக்கள் பேரன்பைப் பெற்றவர். எவ்விஷயத்தையும் சீர்தூக்கிப் பார்த்து மக்கள் நலனுக்கு உகந்தது எது என்பதை ஒளிவு மறைவின்றி, அச்சமோ சங்கோசமோ இன்றித் தெரிவிப்பவர். அவர் மேல்சபைக்குத் தேர்ந்தெடுக்கப்பட்டதால் மேல் சபை விவாதங்கள் இன்னும் ஒளி பெற்றுத் திகழும்.

## ஹரிஜனங்களுக்கு

"காங்கிரஸ் ஆட்சியில் ஹரிஜனங்களுக்கும், ஏழைகளுக்கும் அநேக சௌகரியங்கள் இருந்தன. இது இப்பொழுது படிப்படியாகக் குறைந்து வருகிறது....." என்று திரு காமராஜர் ஜெயங்கொண்டம் தாலுக்கா தாழ்த்தப்பட்டோர் லீக் மகாநாட்டில் கூறியிருக்கிறார்.

ராஜ்ய சர்க்கார் — மத்திய சர்க்கார்களின் நிதி வசதி குறைந்து, திட்டங்களை நிறுத்தப்பட்டுள்ள நிலையில் சென்னை அரசாங்கம் ஹரிஜனங்களுக்கு ஒன்றும் செய்யவில்லை என்று குற்றம் சாட்டுவது, வேண்டுமென்றே வாஸ்தவ நிலையை மறைத்துப் பேசுவதாகும்.

எனினும், திரு அண்ணாதுரை ஹரிஜனங்களுக்குத் தாம் என்ன செய்து வருகிறார் என்பதைச் சட்டசபையில் மிகத் தெளிவாக்கியிருக்கிறார்.

"ஹரிஜனங்களுக்காக வீட்டு மனை ஒதுக்கப்பட்டதாக ஏடுகளில் இருக்கிற அளவு நடைமுறையில் நிறைவேற்றப்படவில்லை என்ற கருத்து இருக்கிறது. ஏற்கனவே, ஒதுக்கப்பட்ட மனைகள் சரியாகப் பயன்படுத்தப்பட்டதா என்பதில் இந்த அரசு கவனம் செலுத்தி வருகிறது. 74,806 மனைகள் ஒதுக்கப்பட்டதில் 42,237 மனைகள் தாம் பயன்படுத்தப்பட்டு இருக்கின்றன.

"இது விஷயத்தில் சர்க்கார் கவனம் செலுத்தத் திட்டமிட்டிருப்பதால் வீட்டு மனை ஒதுக்குவதில் கவனம் செலுத்தவில்லை என்ற குறை தேவையில்லை."

முந்தைய அரசாங்கம் ஹரிஜனங்களுக்குச் செய்ததாகக் கூறப்பட்டவையெல்லாம் பெரும்பாலும் ஏட்டில்தானே ஒழிய நடைமுறையில் இல்லை. அதை இன்றைய அரசாங்கம் அமுல்படுத்த முயல்வது, பல காகிதத் திட்டங்களைவிட எவ்வளவோ மேல்.

## கேரள மாணவர்கள் தீர்ப்பு

கேரளத்தில் இருபத்திரண்டு கல்லூரிகளில் 'ஆங்கிலம் வேண்டுமா? பிரதேச மொழி வேண்டுமா?' என்று மாணவர்களிடம் வாக்கெடுப்பு நடத்தியதில் எண்பத்தொன்பது சதவிகித மாணவர்கள் ஆங்கிலமே போதனை மொழியாக இருக்க வேண்டும் என்று கருத்துத் தெரிவித்துள்ளனர். அறிவை விருத்தி செய்து கொள்ள மேற்படிப்புகளுக்காகவும் நாடெங்கிலும் — சர்வதேசங்களிலும் — வேலை வாய்ப்புப் பெறவும் ஆங்கில மொழியே உகந்தது என்பதை உணர்ந்திருப்பதால்தான் மாணவர்கள் மிகப் பெருமளவில் அம்மொழிக்கு ஆதரவு தெரிவித்துள்ளனர். கல்வியினால் நேரடிப் பயன் பெறும் மாணவரின் கருத்துக்கே இவ்விஷயத்தில் முக்கியத்துவம் தர வேண்டும் என்பது அனைவரும் ஒப்ப வேண்டியதாகும். அரசியல்வாதிகளின் தாய்

மொழிப் பற்று நம் எதிர் காலப் பிரஜைகளின் நல்வாழ்வுக்கு ஊறு விளைவித்து விடக் கூடாது. கேரள மாணவர்களின் தீர்ப்பு தமிழக அரசாங்கத்தின் கவனத்துக்கு உரியது.

## தர்மத்துக்கு அளித்த கௌரவம்


திரு வி. என். மாரியாப் பிள்ளை

இலங்கையில் புசல்லாவ பகுதியில் உள்ள கலுகொல்லைத் தோட்ட உரிமையாளர் திரு வி. என். மாரியாப் பிள்ளை இலங்கை அரசாங்கத்தினால் 'சமாதான நீதவான்' என்ற பட்டம் அளித்துக் கௌரவிக்கப் பட்டிருக்கிறார் என்பதை அறிந்து மகிழ்கிறோம்.

லால்குடி தாலூக்கா வடக்கு சிற்பத்துறையைச் சேர்ந்த திரு மாரியாப் பிள்ளை இலங்கையிலுள்ள இந்திய வம்சாவளித் தோட்ட உரிமையாளர்களில் பிரபலமானவர். ஏராளமாகத் தான தருமங்கள் செய்து நல்ல பெயர் எடுத்தவர். தமது தோட்டத் தொழிலாளருக்காகச் சுமார் ஒன்றேகால் லட்சம் ரூபாய் செலவில் தோட்டத்திலே அழகான தொரு மாரியம்மன் கோயிலையும் அவர் கட்டிக் கொடுத்திருக்கிறார். பல்கலைக் கழகத்தில் உயர்தரக் கல்வி பயில வசதியற்ற பல தோட்டப் பிள்ளைகளுக்கு அவர் நிதி உதவி செய்திருப்பதும் குறிப்பிடத்தக்கது.

## யாருக்குப் பொறுப்பு?

சீனத் தூதரகத்தினரிடமிருந்து கேரளத்திலுள்ள சில அமைப்புக்கள் பண உதவி பெறுவதாகக் கேரள முதன் மந்திரி திரு நம்பூதிரிபாடு அவர்களே கேரள சட்டசபையில் அறிவித்திருக்கிறார்.

கம்யூனிஸ்ட் நாடுகள் இந்திய உள்நாட்டு விவகாரங்களில் எப்படித் தலையிட்டு வருகின்றன என்பதற்கு நம்பூதிரிபாடு அவர்களே சாட்சியம் கூறுகிறார்.

இதில் கேரள அரசு தலையிட்டு நிறுத்த முடியாதா என்று ஓர் உறுப்பினர் கேட்டதற்கு முதன் மந்திரி அளித்துள்ள பதில் கூர்ந்து கவனிக்கத் தக்கது. நம்பூதிரிபாடு,

---

## காமகோடியின் கருணைமொழி



ஸ்ரீராமநவமி : 7-4-68

ராமர் ராஜ்ய பாரம் செய்து கொண்டிருந்த காலத்தில் பிரஜைகள் எப்போதும் ஸ்ரீ ராமா ராமா ராமா என்று சொல்லிக் கொண்டே இருந்தார்கள். 'ராமனது ராஜ்யபரி பாலனத்தில் உலகமே ராமமயமாகிவிட்டது' என்று வால்மீகி ராமாயணம் கூறுகிறது. அவ்வாறே நாமும் பகவன் நாமத்தை ஜபித்து அதன் மகிமையால் துக்கங்களிலிருந்து விடுதலை அடைய வேண்டும். ஒவ்வொரு ஹிந்துவும் ஒவ்வொரு நாளும் 108 தடவை ராம நாமாவை ஜபிக்க வேண்டும். 'ரா—ம' என்ற இரண்டு எழுத்துக்களும் விஷ்ணு மந்திரத்துக்கும் சிவ மந்திரத்துக்கும் முறையே ஜீவ அக்ஷரங்களாய் விளங்குவதால் இந்நாமத்தைச் சமயம் கிடைத்தபோதெல்லாம் ஜபிக்கலாம்.

ஆங்கிலேயர்கள் கூட அக்ஷரத்தின் மகிமையால் வெற்றி யடைந்தார்கள் என்பதைக் கடந்த உலக யுத்தத்தின்போது கண்கூடாகக் கண்டோம். ருஷ்யாவாலும் ஜெர்மனியாலும் மிகுந்த கஷ்டங்களை அநுபவித்த இங்கிலாந்து மிகவும் பரிதாபகரமான நிலையில் இருந்தபோது, அன்றைய அரசாங்கத்தினர் 'விக்டரி' என்ற சொல்லின் முதல் எழுத்தாகிய 'வி' என்பதை ஜீவநாடியாக வைத்து அரசாங்க நடவடிக்கைகளிலும் மற்றும் பொது ஸ்தாபனங்களிலும் அந்த எழுத்தைப் பொறித்து, யாவரும் அதைக் காணவும், கூறவும் செய்தனர். அதன் பெருமையாலேயே வெற்றி கண்டதாக அவர்கள் நம்புகின்றனர். ஆழ்ந்த நம்பிக்கையுடன் நாம் ராம நாமாவை ஜபிப்போமாக!

''இது பற்றிக் கவனிக்கும் பொறுப்பு மத்திய அரசி னுடையது'' என்று கூறியிருக்கிறார். மேலும், ''சீனவுடன் மத்திய அரசு தூதர் உறவை முறித்துக் கொள்ள வில்லை. எனவே, எல்லாத் தூதரகங்களும் எனக்குச் சமம்தான்'' என்று பதிலிறுத்திருக்கிறார்.

நமது நாட்டின் மீது படையெடுத்து நமது வட எல்லையில் 40,000 சதுர மைல் பகுதியைக் கபளீகரம் செய்து விட்ட ஒரு நாடும் மற்ற நாடுகளும் தம் வரைக்கும் சமம் என்று ஒரு ராஜ்ய முதன் மந்திரி கூறுகிறார். இதற்குக் காரணம் அந்நாட்டுடன் தூதரக உறவை இந்திய சர்க்கார் வைத்திருப்பதுதான் என்று சாமர்த்தியமாகக் கேரள முதன் மந்திரி சொல்லித் தப்பித்துக் கொள்ளப்பார்க்கிறார்.

சீன தூதரகப் பண உதவியால் கேரளத்தில் அமைதியும் பாதுகாப்பும் பாதிக்கப்படும் நிலை உருவானல், அதைக் கட்டுப் படுத்துவதில் ராஜ்ய சர்க்காருக்குப் பொறுப்பு உண்டு என்பதனை திரு நம்பூதிரிபாடு மறுப்பதற்கில்லை.


பி. டி. வி. ராமசாமி நாயுடு

## தொழில் பிரமுகர் மறைவு

நெசவாலைத் தொழிலில் சென்னையில் நீண்ட நெடுங்காலமாகத் தம் பெயரை நிலை நாட்டிக் கொண்டுள்ள ஸ்தாபனம் பின்னி கம்பெனி. தரத்துக்கும், உழைப்புக்கும் புகழ் பெற்ற பின்னி ஸ்தாபனத்தின் டைரக்டர் திரு பி. டி. வி. ராமசாமி நாயுடு அதன் வளர்ச்சியில் பெரும் பங்கு கொண்டிருக்கிறார். இது தவிர பங்களூர் உல்லன் காட்டன், சில்க் மில்ஸ், டெக்கான் சர்க்கரை - அப்காரி கம்பெனி போன்ற ஸ்தாபனங்களில் அவர் டைரக்டராகப் பணிபுரிந்திருக்கிறார். அவர் சென்னை ஷெரிபாகத் தொண்டு புரிந்ததை மக்கள் மறந்திருக்க மாட்டார்கள். தொழில் அதிபர் திரு பி. டி. வி. ராமசாமி நாயுடு சமீபத்தில் தம் எழுபத்திரண்டாவது வயதில் இவ்வுலகை விட்டு இறைவனடி சேர்ந்தார். அவர் மறைவால் வருந்தும் அவர் குடும்பத்தினருக்கு நம் ஆழ்ந்த அனுதாபங்களைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

## மாணவர் தொண்டு

ஹரிஜன கைத்தொழில் பள்ளிக்கூடமாகிய தி. நகர் தக்கர் பாபா வித்தியாலய மாணவர்கள் வெகு நல்ல காரியமொன்று செய்துள்ளனர். பள்ளியில் தாமாகவே ஓர் அரசம் வேம்பும் தழைத்து வளர்ந்ததை யொட்டி, அப் புனிதத்தைப் பூர்த்தி செய்வதே போல் விநாயகப் பெருமானுக்கு ஓர் ஆலயத்தை இம்மாணவர்கள் எழுப்பியுள்ளனர். கட்டட வேலை, மின்சாரக் கம்பி பொருத்தியது அனைத்தும் மாணவர்களே ஆர்வத்துடன் செய்திருப்பது பாராட்டுக்குரியது. மார்ச் 31ந் தேதி காலை தக்கர்பாபா வித்தியாலயத்தில் வித்யாகணபதி கும்பாபிஷேகம் பெற்றார். கைத்தொழிலுக்குப் பேரெடுத்த வித்யாலய மாணவர்களுக்கு வித்யாகணபதி சகல வித்தைகளிலும் தேர்ச்சி தந்து அருள்வாராக!

## அண்ணாவும் பிரார்த்தனையும்

முதலமைச்சர் திரு அண்ணாதுரை அவர்கள் சட்டசபையில் கடவுள் பிரார்த்தனையைப் பற்றிக் கூறியுள்ள கருத்துக்கள் ஆஸ்திக உள்ளங்களுக்கு ஆறுதல் அளிக்கும்:

''எனக்குப் பிரார்த்தனையில் நம்பிக்கையில்லை என்று கருதத் தேவையில்லை. பிரார்த்தனையில் பல வகைகள் உண்டு. நான் உள்ளத்திலேயே யாரும் அறியாமல் பிரார்த்தனை செய்து கொள்பவன். எனக்காகப் பிரார்த்தனை செய்பவர்கள் பலர் இருக்கிறார்கள் என்பதும் எனக்குத் தெரியும். எனக்காக அவர்கள் செய்யும் பிரார்த்தனை மிகுந்த பலன் அளிக்கும் என்பதும் எனக்குத் தெரியும்.''

(முரசொலி — 28–3–68)

## கலைத் தூண்

முதல் முறை பார்க்கும்பொழுது ஒரு கோபுரம்போல் தோற்றம் அளிக்கும் அப் படம் உண்மையில் ஒரு தூண் ஆகும். தமிழகத்துக் கலைச் சிறப்பின் உயர்வைப் பறைசாற்றி நிமிர்ந்து நிற்கும் அத் தூண் மிக அழகு படைத்தது. திருநெல்வேலி நெல்லையப்பர் கோயில் மண்டபம் ஒன்றில் உள்ளது.

— புகைப்படம் : பிரேமா ஹரிஹரன்

# அன்பார்ந்த  நேயர்களுக்கு

புத்தாண்டு வாழ்த்துக்களை ஒரு வாரம் முன்னதாகவே வழங்குகிறேன். இப்படி முந்திக் கொள்வதில் ஓர் அனுகூலம் உண்டு. புத்தாண்டு வாழ்த்துக்களைச் சமர்ப்பிப்பதுடன் கல்கி புத்தாண்டு மலரைப் பற்றியும் சில வார்த்தைகள் கூறலாம் அல்லவா ?

தமிழ் நாட்டில் உள்ள சிறுகதை எழுத்தாளர்களின் எண்ணிக்கை எவ்வளவோ அதே அளவுக்கு அல்லது அதற்கும் அதிகமாகவேகூட இன்று விமர்சகர்களும் இருக்கிறார்கள்! கல்கி நேயர்களிடமிருந்து அவ்வப்போது பாராட்டியும், குறைகூறியும் வரும் கடிதங்கள் இன்றைய வாசகர்கள் எத்தனை கருத்துடன் சிறுகதைகளைப் படிக்கிறார்கள் என்பதைத் தெளிவாக்குகின்றன. இதைத் தவிர திறனாய்வு செய்வோர் வேறு ! இந்தச் சூழ்நிலையில் இன்றைக்குச் சிறுகதை எழுதுவதற்கு முதல் பதவை பேனாவும் தாளும் அல்ல, துணிவுதான் என்று கூறினால் தவறாகாது.

அப்படியிருந்தும் துணிச்சலுடன் இன்று தமிழில் எழுத, சிறுகதைகளைப் படைக்கப் பழையவர்களாகவும் புதிதாகவும் எத்தனை பேர்கள் முன்வருகிறார்கள்; தமிழ் சிறுகதை இலக்கியம்தான் எந்த அளவுக்கு இன்று முன்னேற்றமடைந்திருக்கிறது என்று பார்க்கும் போது பிரமிப்பும் மகிழ்ச்சியும் ஏற்படுகிறது. தமிழ்ச் சிறுகதை இலக்கியம் பெரிய அளவுக்கு அடைந்துள்ள முன்னேற்றத்தைக் கண்ணுக்கு மெய்யாக நிரூபிப்பதே போன்று கல்கி புத்தாண்டு மலர் சிறுகதைச் சிறப்பு மலராகத் திகழ்கிறது. திருவாளர்கள் அகிலன், ஆர்வி, கு. அழகிரிசாமி, பி. வி. ஆர்., சோமு, சூடாமணி, பொன்னித்துறைவன், கோவி. மணிசேகரன், தி. சா. ராஜு ஆகியோரது சிறுகதைகள் நவமணிகளாக இந்த மலரை அலங்கரிக்கின்றன.

இதே இதழில் ஸ்ரீமதி கோமகள் எழுதும் ''இனிக்கும் நினைவுகள்'' என்ற நாவலும் ஆரம்பமாகிறது. ஸ்ரீமதி கோமகள் வெள்ளி விழா பரிசுத் திட்டத்தின் கீழ் சிறுகதைக்காகப் பரிசு பெற்றவர். கல்கி வாசகர்கள் அவரது சிறுகதைகளைக் கல்கியில் படித்து ரசித்திருக்கிறார்கள். 'இனிக்கும் நினைவுகள்' அவரது முதல் நாவல். எனினும், இந்த முதல் நாவலிலேயே அவர் வாசகர்களின் உள்ளங்களை முழுமையாகக் கவர்ந்துவிடுவார் என்பதில் சந்தேகமில்லை. பெண் இனத்தின் மென்மைய உணர்வுகளைத் துல்லியமாகப் படம் பிடித்துக் காட்டும் கோமகளின் 'இனிக்கும் நினைவுகள்' என்ற நாவல் கல்கி வாசகர்களின் இதயங்களில் நிலைக்கும்.

புத்தாண்டு மலரையொட்டி வேறு பல புதிய அம்சங்களும் 'கல்கி'யில் ஆரம்பமாகின்றன. நினைவிருக்கிறதா?, விளையும் பயிர், இலங்கைக் காட்சிகள், வாழ்க்கைச் சித்திரம், துருவங்கள் சேர்ந்தால் போன்ற அம்சங்கள் அளவில் சிறியவை. ஆனால் சுவை மிகுதி. ஒவ்வொன்றும் ஒரு 'ஜிண்டான்' மாத்திரை!

இம்மலரில் ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதிகளைப் பற்றி மிஸ் யுஜீனியா போர்கினி என்ற பெயர் கொண்ட ஓர் இத்தாலிய அம்மையார் எழுதியுள்ள கட்டுரை சிறப்பிடம் பெறுகிறது. ஆசார்ய சுவாமிகளின் திருவுருவப் படமும் மலரை அலங்கரிக்கிறது.

ராஜாஜி அவர்களின் மகாபாரதத்தை இரண்டாவது முறையாகத் தொடர்ந்து பிரசுரிக்க ஆரம்பித்தபோது பழசையே மீண்டும் வெளியிடுகிறார்களே என்று நினைத்த பலர் வெகுசீக்கிரம் அதன் எளிய நடையிலும் கருத்தாழத்திலும் ஈடுபட்டு மனம் மாறி கல்கி காரியாலயத்துக்கு எழுதினார்கள். மீண்டும் மகாபாரதத்தைத் தொடர்ந்து வெளியிட்டு வருவதற்காக நன்றி தெரிவித்தார்கள். இப்போது மகாபாரதத்தில் இருபது அத்தியாயங்கள் பிரசுரமாகியிருக்கின்றன. புதிதாகப் படிக்க விரும்புபவர்கள் இடையிலிருந்து தொடங்க வேண்டுமே என்று தயங்க வேண்டாம். மகாபாரதத்தின் எந்தப் பக்கத்தை எப்போது திறந்து பார்த்தாலும் அதில் சுவை உண்டு, இலக்கிய நயம் உண்டு, கதை உண்டு, கருத்து உண்டு. இவை யனைத்துக்கும் மேலாகப் படிப்பவருக்குப் புண்ணியமும் உண்டு! இனியும் தாமதிப்பானேன்?

சதாசிவம்

---

கல்கியில் தொடர்ந்து வரும் 'மகாபாரத'த்தை வாசகர்கள் உற்சாகத்துடன் படித்து வருவதாக அறிந்து மிக்க மகிழ்ச்சி அடைந்து நன்றி செலுத்துகிறேன். உள்ளத்தைத் தேய்த்துச் சுத்தமாக்கும் பொருள் நம்முடைய மகாபாரதம்—இராமாயணத்தைப் போன்று வேறில்லை. அமர ரிஷிகள் வியாசரும் வால்மீகியும் நம்முடைய வாசலில் காத்திருக்கிறார்கள் நம்மைத் தூய்மைப்படுத்த. இதைவிட நமக்கு வேறென்ன பாக்கியம்? அவர்களை வாசலில் காக்க வைக்காதிருப்போமாக. கல்கியில் வாராவாரம் பாரதத்தைப் படிப்பவர்கள் எண்ணிக்கை வளர வேண்டும்.

சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரி



# உங்கள் கனவை நனவாக்க

## பின்னியின்

# தூய பட்டுப் புடவை

மென்மை சுகமும்,
அழகும் மிக்க புடவை உடுத்தி
கனவுலக இன்பம் காண விரும்பும்
எழில் மங்கையருக்கு பின்னியின்
தூய பட்டுப் புடவை
அவ்வனுபவத்தை அளிக்கிறது.
என்ன கவர்ச்சி!...என்ன பள
பளப்பு!...பின்னியின் தூய பட்டுப்
புடவை, நினைவாக்கும் கனவிதுவே.
பின்னியின் தூய பட்டுப் புடவை,
தூய ஜார்ஜெட், மென் பட்டு,
ஷாட் ஸில்க்.

bm-4268

# ராஜாஜியின் கருத்துக்கள்

லோக்பால் என்ற பெயரில் மந்திரிகள் உள்பட உயர் தலைவர்கள் குறித்த ஊழல்களை விசாரிப்பதற்காக நிறுவப்படும் அமைப்பைத் தமிழக முதன் மந்திரி ஆட்சேபித்திருக்கிறார். மத்திய சர்க்காரால் அமைக்கப்படும் இவ்விசாரணையால் ராஜ்ய அரசாங்கங்களின் அதிகாரம் குன்றிவிடும் என்பது அவரது வாதம். இது விவேகமான முடிவாகத் தோன்றவில்லை. பாதிக்கப்பட்டவர்கள் நீதிமன்றங்களில் பரிகாரம் தேட வொண்ணாத விதத்தில், அரசியல் நிர்ப்பந்தங்களின் கீழ் சர்க்கார்கள் செயல்பட்டுத் தமது பேரதிகாரத்தினால் அநீதிகள் இழைக்கும் போது அவற்றுக்குப் பரிகாரம் காணவே லோக்பால் அமைப்பு முதலில் ஸ்காண்டிநேவியாவில் 'ஆம்பட்ஸ்மன்' என்ற பெயரில் நிறுவப்பட்டது. வேறு பல தேசங்களும் இதைப் பின்பற்றுகின்றன. நீண்டகாலமாக இப்படி ஓர் அமைப்பு நம் நாட்டிலும் ஏற்பட வேண்டும் என்று நான் விரும்புவதை வாசகர்கள் அறிவர்.

இவ்வமைப்பின் உயர்ந்த லட்சியத்துக்கு மாறாகத் தமிழக முதல் மந்திரியோ, இது ராஜ்ய அரசாங்கங்களின் உத்தரவுகளில் தலையீடு செய்வதாகும் என்று பயப்படுகிறார். உண்மையில் ராஜ்ய அரசாங்கங்களுடைய உத்தரவு மட்டுமின்றி மத்திய அரசாங்கத்தின் உத்தரவுகளும் நீதி முறைப்படி பரிசீலிக்கப்பட வேண்டிய சந்தர்ப்பங்களில் இத்தகைய பரிசீலனைக்கு உதவவே லோக்பால் அமைக்கப்படுகிறது. சக்தி வாய்ந்த காப்புகள் இருந்தாலொழிய, பெரும்பான்மை மக்களின் தலைவர்களிடம் பூரண அதிகாரம் இருப்பது கொடுங்கோன்மைக்கு இடமளிக்கக்கூடும். பெரும்பான்மை கோஷ்டியில் இல்லாதவர்களுக்கு ஜனநாயகம் மட்டுமே காப்பாகி விடாது. தம்மை அதிகாரத்தில் வைத்தவர்களிடம் நல்ல தலைவர்களும்கூடச் 'சிறைப்பட்டுவிடுவது' உண்டு. இவர்களைத் தலைமையில் வைத்துள்ள கோஷ்டி அநீதங்கள் செய்ய விரும்புவதும் உண்டு.

ஃஃஃ

ஒரு சர்க்காரின் கீழுள்ள மக்கள் குறிப்பிட்ட ஒரு போரில் வெற்றியடைய வேண்டும் என்று தீவிர உணர்வு கொள்ளாத போது சர்க்கார் இத்தகைய போரை மேற்கொள்ளுவது கடினம். தமது நாடு உலக விவகாரத்தில் ஈடுபடாமல் தனித்திருக்க வேண்டும் என்று மக்கள் விரும்பும்போது, உலக நன்மைக்காகப் போரிட வேண்டுமென்று இம்மக்களின் அரசாங்கம் மனப்பூர்வமாக நினைத்தாலும் அதன்படி செயலாற்ற முடிவதில்லை. விலங்கு பூட்டிய கால்களுடன் ஓடுவது போலவே அந்த அரசாங்கம் நடக்க வேண்டியிருக்கிறது. வியட்நாம் போரில் அமெரிக்கா பங்குகொள்வது எம்மட்டும் சாத்தியம் என்பது மேற்படி பிரச்னையைக் குறித்ததே. வியட்நாம் விவகாரத்தினால் பாதிக்கப்பட்டவர்கள் ஆசியாவிலுள்ள பலவீனமான நாடுகளைச் சேர்ந்தோரே. கம்யூனிஸ விஸ்தரிப்புக்கு இவர்களே ஆளாகியிருக்கிறார்கள். அணு ஆயுத சகாப்தம் பிறந்தபின் சிறிய பலவீனமான நாடுகள் தனித்து ஒதுக்கப்பட்டன. அவை தாமாகவும் தற்காப்பு செய்து கொள்ள முடியவில்லை. பிற வல்லரசுகளின் சக்தி வாய்ந்த உதவியைச் சார்ந்தும் இருக்க முடியவில்லை. ஏனெனில், இவ்வல்லரசுகள் தாங்கள் எங்கு தோற்றுவிடுவோமோ என்று பயப்படாவிடினும் யுத்தம் உலக நாடுகளிடையே தம்மால் பரவிவிடக்கூடாது என்பதில் பயம் கொண்டுள்ளனர். இதுவும் ஏறக்குறைய தோல்வி மனப்பான்மைக்குச் சமமானதே.

ஃஃஃ

லண்டனிலுள்ள லோகமான்ய திலகர் ஞாபகார்த்த நிதியின் நிர்வாகியாகிய ஸ்ரீ தக்ஷ் மாங்கர் எதிர்ப்புக்குச் சளைக்காமல் உழைத்து வருபவர். லண்டனில் அறுபது லட்சம் ரூபாய் செலவில் இந்திய கேந்திரம் ஒன்று நிறுவ அவர் ஞாபகார்த்த நிதியின் ஒப்புதலைப் பெற்றுள்ளார். பிரிட்டன், இந்தியா இரண்டும் இத்தொகையைச் சம அளவில் பகிர்ந்து கொள்ள வேண்டும் என்பது அவரது திட்டம். லண்டனில், பிரான்ஸ், நார்வே முதலிய நாடுகளின் கலாசாரக் கேந்திரங்கள் உள்ளன. அமெரிக்கா, ருஷ்யா, மற்றும் முஸ்லிம் நாடுகளின் கேந்திரங்களும் உள்ளன. இந்திய கேந்திரமும் இருக்க வேண்டியது பொருத்தமே. ஸ்ரீ தக்ஷ்மாங்கரை இதற்காகப் பாராட்ட வேண்டும். இம் முயற்சியில் அவர் வெகுதூரம் முன்னேறியுள்ளார். இந்தக் கேந்திரத்துக்குத் தரப்படும் நன்கொடைகளுக்கு இந்திய சர்க்கார் வருமான வரியிலிருந்து விலக்கு அளித்துள்ளது. மற்ற பல அலுவல்களோடு மேற்படி கேந்திரம் பிரிட்டனிலுள்ள சர்வ கலாசாலைகளில் சம்ஸ்கிருதப் பயிற்சிக்கு விசேஷ ஊக்கம் அளிக்கும். முன்பு சம்ஸ்கிருத ஆராய்ச்சி நன்கு நடைபெற்று வந்த பிரிட்டிஷ் சர்வகலாசாலைகளில் இப்போது ஏனோ அந்த அளவுக்கு ஆர்வம் இல்லை. எனவே தக்ஷ்மாங்கரின் முயற்சியைப் பாராட்ட வேண்டும். நிதி அனுப்ப வேண்டிய முகவரி: **Treasurer, Lokmanya Tilak Memorial Trust, 60, Talbot Road, London W-2.**

ஃஃஃ

நேரு அவர்களுடைய டம்பாச்சாரித் திட்டங்கள் எத்தகைய துன்பக் கதையாக முடிந்தன என்பதைச் சமீபத்தில் 'ஹிந்து'வில் வெளியாகியுள்ள ஒரு தலையங்கத்தின் தொடக்கம் குறிப்பிட்டுக் காட்டுகிறது. ருஷ்யாவில் நடந்தது போன்ற பலாத்காரப் போர் இல்லாமலே இந்தியாவை கம்யூனிஸ நாடாக்கத்தான் இந்த டம்பாச்சாரித் திட்டம் வழி செய்தது.

இந்துஸ்தான் ஸ்டீல் கம்பெனியின் கீழுள்ளவை துர்காபூர், ரூர்கேலா, பிலாய் திட்டங்கள். இவை மார்ச் 67 முடிய 82 கோடி ரூபாய் நஷ்டமடைந்துள்ளன. நடப்பு ஆண்டில் மேலும் 40

கோடி ரூபாய் நஷ்டம் மதிப்பிடப்பட்டுள்ளது. சமீப காலத்தில் இத்திட்டங்கள் லாபம் காட்டாவிடினும் நஷ்டமடையாமலாவது இயங்குமா என்று கற்பனை செய்து பார்ப்பதே கடினமாக உள்ளது.

'ஹிந்து' குறிப்பிடும் பெரும் நஷ்டங்கள் வெறும் புள்ளிகளல்ல. அவை தேசம் தாங்கும் உண்மையான நஷ்டங்கள். வரிகளும் பண வீக்கமும் விலைவாசி உயர்வும் பெருகி வரும் இன்று இந்த நஷ்டச் சுமையை ஏழை மக்களே அதிகம் தாங்கி வருகின்றனர். இவ்வளவு செய்தும் சர்க்காரின் வரவையும் செலவையும் ஈடுகட்ட முடியவில்லை. பட்ஜெட்டில் துண்டு விழுந்திருக்கிறது. நிதிமந்திரி இந்திரனை நோக்கி மழைக்குப் பிரார்த்திக்க வேண்டியதாகிறது. இந்திரன் மழையை அனுப்பலாம். ஆனால் மொரார்ஜி இடியை அனுப்புவார். அந்த இடி விவசாயிகள் மீதே விழும்.

முன்னேறவும் முடியாமல் பின் வாங்கவும் முடியாமல் ஒரு பெரிய விரயமான சூழலில் இந்தியப் பொருளாதாரம் சிக்கிக் கொண்டுள்ளது. மேஜை, நாற்காலி போட்டு அமர்ந்து வேலை செய்யப் பழகியவர்கள்மீது தொழில் உற்பத்திப் பொறுப்பு சுமத்தப்பட்டுள்ளது. இந்த அதிகாரிகள் தங்கள் அறியாமையை மறைக்கும் கலையிலேயே தேர்ச்சி பெற்றவர்கள். இம்முறை தோல்வி பெற்று விழ வேண்டியதுதான். அப்படியே நடந்தும் வருகிறது. இந்தியாவில் சர்க்கார் தொழிலகங்கள் சரிவர வேலை செய்யவில்லை என்று ருஷ்ய அறிஞர் குழுவும் கருத்து தெரிவித்துள்ளது. இதை ஜவாஹர் அவர்களின் ஆன்மா கேள்வியுற்றால் 'நீயுமா புருட்டஸ்?' என்று அலறும்.

ஃஃஃ

ஒரு தேசத்தின் நாணயத்துக்கு அந்தேச சர்க்காரின் தங்கக் கையிருப்பு சிறந்த பலமாகும் என்ற கட்டுக் கதையைச் சமீபத்திய டாலர் நெருக்கடி சிதைத்துவிடும் எனத் தோன்றுகிறது. இந்த டாலர் நெருக்கடியால் உலகம் முழுதும் பொருளாதாரச் சீர்கேடு உண்டாகியுள்ளது. சுபிட்சமாக உள்ள ஒரு தேசத்தின் காகிதப் பணம் அந்நாட்டின் வியாபாரத்துடனும் தேசிய வருமானத்துடனும் உரிய முறையில் சம்பந்தப்பட்டிருக்குமாயின் அந்தக் காகித நாணயமே தங்க நாணயத்துக்குச் சமமாக இருக்கும் என்று எண்ண வேண்டியதாகிறது. ஒரு தேசத்தில் உண்மையான தங்கக் கையிருப்பு அந்நாட்டின் உற்பத்தித் திறனேயாகும். பளபளவென்றிருக்கும் பொன்னைவிட உற்பத்திச் சக்தியே சிறந்த பொன்னாகும். ஒரு தேச மக்களின் நேர்மையும் செயலாற்றலும் அறிவுமே அதன் நாணயத்துக்குப் பலமூட்டுபவை. தங்கக் கையிருப்பைப் பாதுகாப்பதைவிட மேற்சொன்ன குணாதிசயங்களைப் பாதுகாக்கவே அரசாங்கங்கள் முயற்சி எடுக்க வேண்டும்.

இன்றைய டாலர் நெருக்கடியின் விளைவாக, தங்கக் கையிருப்பைச் சார்ந்துள்ள நாடுகள் எனவும், நான் மேலே சொன்ன பண்புகளைப் பலமாகக் கருதும் நாடுகள் எனவும் உலகம் இரண்டு பிரிவுகளாகலாம். இறுதியில் காகிதமே சர்வ தேசங்களாலும் பரிசோதிக்கப்பட்ட தங்கமாக ஏற்றுக் கொள்ளப்படலாம்.

ஃஃஃ

சினிமா விமரிசனத்தோடு நமது தினசரி, வாராந்திரப் பத்திரிகைகளில் வெளியாகும் மயக்குப் படங்கள் மேற்படி சினிமாக்களைவிடவே அதிகத் தீங்கு செய்கின்றன. ஏனெனில், இச்சினிமாக் காட்சிகளைப் பார்ப்பவர்கள் பத்திரிகை வாசகர்களைவிடக் குறைவாகவே இருக்கலாம். காம உணர்ச்சியைக் கிளறி விடுவதைத் தங்களது ஜீவாதார உரிமைகளில் ஒன்றாக எவருமே சொல்வதற்கில்லை. இத்தீமைக்குச் சமாதானம் சொல்லி அதனைச் சகித்துக் கொள்வதற்கு ஏதுமேயில்லை. பத்திரிகைத் தலைவர்களின் பொதுக் கருத்து உருவாகி அதன் மூலம் இந்தக் கவர்ச்சிப் படங்கள் வெளியாவது நிற்கலாகாதா? இவ்விஷயமாக நான் முன்பே எழுதி விட்டேன். மீண்டும் எழுதுகிறேன். ஏனெனில், திரும்பத் திரும்ப இந்தப் படங்கள் பத்திரிகைகளில் வெளியாகி இளைஞர்களை நாசம் செய்வதைப் பார்க்க மனம் புண்ணாகிறது.







சென்னை சங்கீத நாடக சங்கம் வருஷா வருஷம் கலைஞர்களுக்கு விருது வழங்கிக் கௌரவித்து வருகிறது. இந்த வருஷம் அந்தக் கௌரவத்தைப் பெற்றவர்கள்: சங்கீதத் துறை: சுத்தானந்த பாரதியார், திருமுருக கிருபானந்தவாரியார், குன்னக்குடி திரு வெங்கடராமய்யர், வரகூர் திரு முத்துசாமி அய்யர், திரு ரங்கதாஸ், திரு எஸ். பாலசந்தர், ஸ்ரீமதி சாவித்திரியம்மாள், இஞ்சிக்குடி திரு பிச்சைக்கண்ணு, பந்தணைநல்லூர் முத்தையாபிள்ளை, ஸ்ரீமதி கமலா. நாடகத்துறை: திரு ஜானகிராமன், ராஜா ஷண்முகதாஸ், எம். என். நம்பியார், ஸ்ரீமதி ஜயலக்ஷ்மி, திரு ஏ. எம். மருதப்பா, திரு ஒய். ஜி. பார்த்தசாரதி; திரைப்படத் துறை: திரு கொத்தமங்கலம் சுப்பு, திரு ப. நீலகண்டன், திரு எஸ். எஸ். ராஜேந்திரன், ஸ்ரீமதி விஜயகுமாரி, திரு ஏ. ராமய்யா, திரு ஆர். சுதர்சனம், திரு கம்பதாசன்.

சென்னை இந்து கர்ம மன்றத்தார் மயிலை பி. எஸ். உயர்நிலைப்பள்ளியில் திருப்பாவை—திருவெம்பாவை மகாநாடு நடத்தினார்கள். ஆசாரிய சுவாமிகள் வழங்கிய சுழற் கேடயத்தைப் பரிசுபெற்ற வன்னிய சங்கப் பாடசாலைக்கு அதன் தலைமை ஆசிரியையிடம் வழங்குகிறார் கல்வி இலாகா கூட்டு ஆணையர் திரு சிட்டிபாபு.

'இண்டஸ்ட்ரியல் எக்கானமிஸ்ட்' என்னும் மாதமிருமுறை புதிய " பத்திரிகையைத் தமிழகத் தொழில் மந்திரி திரு வி. ஆர். நெடுஞ்செழியன் சமீபத்தில் தொடங்கி வைத்தார். அதன் ஆசிரியர் திரு எஸ். விசுவநாதன் அனைவரையும் வரவேற்றார். சித்ரா திரு எஸ். நாராயணசாமி இவ்வைபவத்துக்குத் தலைமை வகித்தார்.

சென்னை புரசைவாக்கம் கங்காதீசுவரர் ஆலயத்தில் 11—7—68 அன்று ஜீர்ணோத்தாரண மகாகும்பாபிஷேகம் சிறப்பாக நடந்தேறியது.






உலகத் தமிழ் மகாநாட்டின் பயனாக உருவான உயர்ந்ததோர் புத்தகத்தையும் பல ரக டாக்டர்கள் இயங்கும் விதத்தை வர்ணிக்கும் ஒரு நூலையும் இங்கு அறிமுகம் செய்து கொள்ளலாம்.

## கையேடு

சென்னையில் எட்டு நாட்கள் உலகத் தமிழ் மாநாடு நடந்தது. மாநாட்டின் முக்கிய அம்சமாக விளங்கிய கலைக் காட்சியின் சார்பில் ''கையேடு'' என்ற மாபெரும் நூல் வெளியிடப்பட்டிருக்கிறது.

வெறும் கதை, கட்டுரைகள் அடங்கிய நூலாயிருந்தால் அது எவ்வளவு பெரியதாயிருந்தாலும் விடுவிடுவென்று படித்து முடித்துவிடலாம். ஆனால், கையேடு ஒரு கருத்துக் களஞ்சியம். வற்றாத இலக்கிய ஊற்று; சங்க காலத்தை, தமிழரின் வரலாற்றுத் தொடக்கத்தை, தமிழரின் வாழ்வை அவர்களது பண்பாட்டின் மேன்மைகளையெல்லாம் விளக்கமாக இந்நூலில் காண முடிகிறது.

''தமிழ் எழுத்துக்கள் — அன்று முதல் இன்றுவரை'' என்ற திரு சா. கணேசன் அவர்களின் கட்டுரை ஆழ்ந்த ஆராய்ச்சிக் கட்டுரை. ''பரதம் — அதன் முத்திரைகள்'' என்ற பரதநாட்டியத்தைப் பற்றிய கட்டுரை பலவகை ஹஸ்த அபிநயங்களின் சித்திரங்களுடன் வெளிவந்திருக்கின்றன. அது மிகவும் பயனுள்ள கட்டுரை. இன்னும் ''தமிழ்ப் பணியாற்றிய அயல் நாட்டு அறிஞர்கள்'', ''வரலாற்று நெறியில் காலப் பகுப்பு'' ''கல்வெட்டுத் தரும் செய்திகள்'' முதலியவை யெல்லாம் தமிழர்கள் பலரும் படித்துப் பயனடைய வேண்டிய அரிய கட்டுரைகள். தமிழகத்தில் சிற்பங்களின் புகைப்படங்களும், ஆலயங்களின் புகைப் படங்களும் நல்ல ஆர்ட் தாளில் அச்சிடப்பட்டு நூலின் பிற்பகுதியாகச் சேர்க்கப்பட்டிருக்கின்றன.

இம்மாபெரும் நூலைத் தொகுத்து வெளியிடுவதில் திரு சா. கணேசன் அவர்களின் பொறுப்பு மகத்தானது. பல அரிய விஷயங்களை அவரே எழுதியும், மற்றும் பல விஷயங்களைப் பிறரிடமிருந்து சேகரித்தும் கையேட்டைக் கனிந்த நூலாகச் செய்திருக்கிறார்.

அயராது உழைத்துத் தமிழ் கூறும் நல்லுலகின் நன்மையைக் கருதி இத்தகைய ஆராய்ச்சிக் கட்டுரைகளை வழங்கியிருப்பது ''கையேட்டு''க்குத் தனிப் பெருமை தருகிறது.

தமிழ் பயிலுகிறவர்களுக்குப் பல விதத்திலும் பயன்படத் தக்க இந்தக் ''கையேடு'' தமிழன்பர்களின் கையோடு இருக்க வேண்டிய நூல்.

வெளியிடுவோர்: கலைக் காட்சிக் குழு, இரண்டாவது உலகத் தமிழ் ஆராய்ச்சிக் கருத்தரங்கு மகாநாடு, சென்னை. கிடைக்குமிடம்: காதி கிராப்ட், குறள் அகம், எஸ்பிளனேட், சென்னை-1. விலை: ரூ. 15.00

## டாக்டர்

ஆதிநாட்களில் பிணத்தைக்கூட யாரும் அறுத்துப் பார்க்கக் கூடாது. சமய நம்பிக்கைகளும் இதற்கு எதிராக இருந்தன.

வெசாலியுஸ் மானிட அமைப்பியலில் அளவுகடந்த ஆர்வம் கொண்டு ஆராய்ச்சிகள் புரிந்து வந்தார். ஒரு நாள் பாரிஸ் நகருக்கு வெளிப்புறத்தில் முந்திய நாள் தூக்குத் தண்டனை விதிக்கப் பெற்றவனின் சடலம் பருந்தும் கழுகும் கொத்த விட்டு வைக்கப்பட்டிருப்பதைக் கண்டார். இரவு நேரத்தில் தமது நண்பர்களுடன் அச்சடலத்தைத் தம் அறைக்குக் கொணர்ந்தார். அதை அங்கம் அங்கமாக அறுத்துச் சோதித்தார். தமது ஆராய்ச்சிகளை நூலாக வெளியிட்டார். அதை மறுத்து அன்று பல பத்தாம் பசலிகள் அவரைக் கண்டனம் செய்தார்கள். என்றாலும் இன்றளவும், வெசாலியுஸின் நூல் மருத்துவக் கலையின் அடிப்படை நூலாக விளங்குகிறது.

இந்த விதமாக ஆரம்பித்த மருத்துவக் கலை, இன்று ஆன்டிபயாடிக்ஸ் அற்புத மருந்துகள், ரத்தம் சிந்தாமல் லாஸர் ஒளி அறுவைச் சிகிச்சை என்று மகத்தான முன்னேற்றங்களைக் கண்டிருக்கிறது.

டாக்டர் அல்லது மருத்துவ இயலுக்கு அறிமுகம் என்ற இந்நூல் பல ரக டாக்டர்களைப் பற்றியும் அவர்கள் இயங்கும் விதங்கள் பற்றியும் விவரிக்கிறது. உடல் ஆரோக்கியம் பேணல், நோய் வருமுன் காப்பு ஆகியவற்றுக்கு உபயோகமான தகவல்கள் உள்ளன. எழுதியவர் குழந்தைநாதன். குழந்தைகளுக்கும் புரியும் இலகு நடையில் நூல் அமைந்திருக்கிறது. நகைச்சுவையும் ஆங்காங்கே எட்டிப் பார்க்கிறது.

நாலாம் பக்கத்தில் 'டாக்டர் ஒவ்வொரு நாளும் உரிய நேரத்தில் வந்து போனார்' (வீட்டுக்கு) என்று இருக்கிறது. ஒன்பதாம் பக்கத்தில் 'தினந்தோறும் டாக்டர் ஒவ்வொரு வீடாகச் சென்று நோயாளிகளைக் கவனிக்கிறார் என்று கருதி விடாதீர்கள். வாரத்தில் மூன்று நாட்கள் மட்டுமே, இப்படி வெளி விசாரிப்புக்குப் புறப்படுகிறார்' என்றுள்ளது. இப்படி ஒருசில முரண்பாடுகள் இருப்பினும் வைத்தியத் துறை சம்பந்தமான விஞ்ஞான விஷயங்களில் தவறேதும் இராது என்று நம்பலாம். நூலாக்கத்துக்கு அன்புடன் அருந்துணை புரிந்த அன்புநாதன் ஒரு டாக்டர் என்பதால்.

கிடைக்குமிடம்: அழகுப் பதிப்பகம், காரைக்குடி — 1; விலை: ரூ. 3 00; பரிசுப் பதிப்பு: ரூ. 4 00.







படங்கள்:
குமாரிகள் ஷீலா, சுதா, கிரன்பிரேவால்.

# நீச்சல் பயின்ற நங்கையர்

## விளையாட்டில் வீராங்கனை

பெண்களின் நயனங்களை மீன்களுக்கு ஒப்பிடுவது சகஜம். அதனால் பெண்களுக்குச் சுலபமாக நீந்த வந்துவிடுகிறதா என்ன? நீச்சலடிப்பதில் எத்தனையோ விதமான முறைகள் இருக்கின்றன. வண்ணத்துப் பூச்சி நீச்சல், தவளை உதை நீச்சல், கத்திரி நீச்சல், மல்லாக்கு நீச்சல் என்று பல வகை உண்டு. எல்லாவற்றிலும் மூச்சைச் சரியாக விட்டுச் சளைக்காமல் முன்னேறிச் செல்லக் கடுமையான பயிற்சி தேவைதான் !

சென்னை ஒய். எம். ஸி. ஏ. நீர்த் தடாகத்தில் பெண்மணிகளும் சிறுமிகளும் அவரவர்கள் போட்டியில் மீன்களைப் போல் அநாயாசமாகப் பயமில்லாமல் இருநூறு, நூறு அடிகள் தூரத்துக்கு ப்ரீ ஸ்டைல், பிரஸ்ட் ஸ்டிரோக், ரிலே ஆகிய பந்தயங்களில் கலந்து கொண்டனர். உயரே இருந்து அம்பு போல் பாய்ந்து நீரைக் கிழித்துக் கொண்டு உட்புகுந்து பிறகு நீச்சல் அடித்த அழகை இன்றைக்கெல்லாம் பார்த்துக் கொண்டிருக்கலாம் போலிருந்தது ! சீனியர் நீச்சல்போட்டிகளில் ஆறு பரிசுகளைப் பெற்று வீராங்கனைப் பட்டத்தைப் பெற்றவர் குமாரி சுதா சீநிவாசன்! எட்டாம் வயதிலிருந்தே வேப்பேரியிலுள்ள ராயல் நீச்சல் குளத்தில் பயிற்சி யடைந்து அநுபவம் பெற்றிருந்ததால் அத்தனை போட்டிகளில் அவள் வெல்ல முடிந்தது ! அவளது நீச்சலில் கம்பீரமும் அதே சமயம் நளினமான அழகும் மிளிர்ந்ததை அனைவருமே பார்த்து வியந்தார்கள்.

''நான் வித்யோதயா பள்ளியில் பயின்று, இப்பொழுது ஸ்டெல்லா மேரீஸ் கல்லூரியில் பி. யூ. ஸி. வகுப்பு படித்து வருகிறேன்!'' என்று கூறினாள் குமாரி சுதா.

''சுதா! சுதா! சுதா !'' என்று மூன்று தடவை அவளைக் கூப்பிட்டார் ஒரு பெரியவர்.

''என்ன? என் தந்தை மூன்று தரம் கூப்பிடுகிறார் என்று வியக்கிறீர்களா? அவர் சென்னை மூர்ரே ஏலக்கம்பெனியின் பாகஸ்தர்'' என்று கூறிவிட்டு அதனைத் தொடர்ந்து, ''நான் நீச்சல் பயிற்சியில் வெற்றி பெறுவதற்கு அவர் காட்டும் சிரத்தையே காரணம்!'' என்று தன் தந்தை சீநிவாசனைப் பற்றிச் சொன்னாள் குமாரி சுதா.

''என் பெண்ணுக்கு நீச்சல் மட்டும் தெரியும் என்று நினைத்து விடாதீர்கள். அவளுக்கு ஓவியம் தீட்டுவது, வீணை வாசிப்பது முதலிய கலைகளிலும் தேர்ச்சி உண்டு !'' என்று பெற்ற மனம் பெருமை பேசியது.

''என் சகோதரனும் நீச்சல் புலியாக்கும்!'' என்றாள் குமாரி சுதா.

''கங்க்ராஜுலேஷன்ஸ் சுதா!'' என்று கூறிக் கொண்டே சீக்கிய தம்பதிகள் எங்களருகே வந்தனர். அவர்களோடு பதின்மூன்று வயதுச் சிறுமி குமாரி கிரன் இரேவாலும் குதித்துக் கொண்டே வந்தாள்.

''ஸார் ! குமாரி இரன்கிரேவால் நீச்சல் போட்டியில் சிறுமிகளுக்கான பரிசுகளைப் பெற்றவள். போன வருஷம்தான் ஒய். எம். ஸி. ஏ., நீர்த் தடாகத்தில் பயிற்சியைத் தொடங்கினாள். இந்த வருஷம் முதல் தடவையாகப் போட்டியில் கலந்து கொண்டதும் ஐந்து பரிசுகளைப் பெற்று விட்டாள்!'' என்று அறிமுகப்படுத்தினாள் குமாரி சுதா.

''எங்கள் பெண் செயின்ட் கொலம்பஸ் உயர்நிலைப் பள்ளியில் ஒன்பதாவது வகுப்பு படிக்கிறாள். சனிக்கிழமையும் ஞாயிற்றுக் கிழமையும் எங்களைத் தொந்தரவுபடுத்தி அவள் ஒய். எம். ஸி. ஏ. நீர்த் தடாகத்துக்குப் பயிற்சிக்கு வந்து விடுவாள். அதற்குக் கைமேல் பலன் இன்று கிடைத்துவிட்டது!'' என்று கிரேவால் தம்பதியினர் மகிழ்ந்தனர்.

''என்னைப் போலவே ஷீலாவும் சிறுமிகளுக்கான நீச்சல் போட்டியில் மூன்று பரிசுகள் பெற்றிருக்கிறாள். அவளை அழைத்து வருகிறேன் !'' என்று ஓடிப் போனாள் குமாரி இரன் கிரேவால்.

''ஸார் ! ஷீலா எஸ். ஏ. பி. போலீஸ் அதிகாரி திரு வி. ஜி. நாராயணசுவாமியின் புதல்வி. அவர்தான் இந்த நீச்சல் கழகக் காரியதரிசி. போட்டிகள் சிறப்பாக நடைபெற உறுதுணையாக நின்றவர் !'' என்று சொல்லிவிட்டுத் தூரத்தில் அங்கும் இங்கும் ஓடியாடி நீச்சல் போட்டிகள் முறைப்படி நடப்பதில் கவனத்தைச் செலுத்திக் கொண்டிருந்த திரு நாராயணசுவாமியைச் சுட்டிக் காட்டினார் திரு சீனிவாசன்.

சென்னை ராஜ்ய நீச்சல் போட்டியில் குமாரி சுதாசீனிவாசன், குமாரி இரன் கிரேவால், குமாரி ஷீலா போன்ற நீச்சல் வீராங்கனைகளின் திறமை வெளிப்பட்டது.

— குண்டுமணி

# காகித ஓடம் (நாடகம்)

**பா**லு அண்ணன்; வக்கீல் கீதா அவனது அருமைத் தங்கை. அநாதைகளான இருவரும் ஒருவர் மீது ஒருவர் உயிரையே வைத்திருந்தனர். கள்ளம் அறியாத கீதாவின் உள்ளத்தில் வாலிபன் குமாருக்கு இடம் கிடைத்தது. இதையறிந்த பாலு அவர்கள் திருமணத்துக்கு ஏற்பாடு செய்தான். ஆனால் குமாருக்கு நளினி என்ற பணக்காரப் பெண்ணின் உள்ளத்திலும் இடம் கிடைத்திருந்தது பாலுவுக்குத் தெரியாது. குமாரின் நல்வாழ்வைக் கருதி, கீதா தன் காதலைத் தியாகம் செய்து நளினியோடு அவனை இணைத்து வைக்கிறாள்.

காதலும், கண்ணீரும், பாசமும், பரிவும், தியாகமும் இருந்தால் மட்டும் ஒரு நாடகம் பூர்த்தி பெற்று விடுவதில்லையே ! அவலச்சுவை வேண்டாமா? அதற்காகத்தானோ என்னவோ ஒரு கொலை விழுகிறது; அந்தக் கொலையைச் செய்த பழி குமாரின் மீது விழுகிறது. தன் காதலைத் தியாகம் செய்த கீதா குமாருக்காக நீதிமன்றத்தில் வாதாடி, உண்மைக் குற்றவாளியைப் பிடித்துக் கொடுத்து மற்றும் ஒரு தியாகத்தையும் செய்து விடுகிறாள் — ஆம், அவள் அண்ணன் பாலுதான் உண்மைக் குற்றவாளி!



ஸஸ்பென்ஸும், சங்கடமும், சாதுர்யமும், சிக்கலும் கொண்ட இந்நாடகத்தை எழுதிய மெலட்டூர் விசுவநாத், உயிருள்ள வசனமும் தீட்டி மேடையைக் கலகலப்பாக்கியிருக்கிறார். ஸாயி பைன் ஆர்ட்ஸ் குழுவினர் இந்நாடகத்தைப் பலமுறை நிகழ்த்தியிருப்பதே இதன் பெருமைக்குத் தக்க சான்று.

பாலுவாக நடித்த ஆர். ரகுநாத் ஹாஸ்யமாக நடித்து எல்லோரையும் சிரிக்க வைப்பதோடு, சோகமாக நடித்துக் கண் கலங்கவும் வைத்து விடுகிறார். கீதாவாக வந்த சகுந்தலா கலகலவெனச் சிரித்து, கண்ணீர் வடித்து, அழுத்தந்திருத்தமாகப் பேசி அநாயாசமாக நடிக்கிறார். ரத்தினாதேவிதான் நளினி; பணத் திமிரில் பதற்றமாகப் பேசிய போதும், கணவனின் அன்பைப் பெற முடியாமல் கண் கலங்கி நின்ற போதும் அவர் நடிப்புத் திறமை பளிச்சிட்டது. புனிதவேல் குமாராகத் தோன்றி, நகைச்சுவை ததும்பப் பேசி நன்றாய் நடித்தார். சினிமாப் பித்து ரகு, நாடகத்தின் சிரிப்பு அம்சம்; அவனையே சிறப்பு அம்சமாகவும் கூறலாம். ரகுவாக வந்த சுப்பிரமணியம் சக்கைப்போடு போட்டு விட்டார்.

விறுவிறுப்பான வசனம், கறுகறுப்பான சீன்களின் மாற்றம், நல்ல நடிப்பு எல்லாமாகச் சேர்ந்து ''காகித ஓட''த்தைக் காற்றடித்துச் செல்லாமல் காப்பாற்றிவிட்டன!

# கால்கேட்டின் மூலம் நாள் முழுவதும் வாய் துர்நாற்றத்தை அகற்றி பற்கள் சொத்தையாவதையும் தடுங்கள்!

ஏனெனில் ஒரே தேய்ப்பில் கால்கேட் கிரீம், துர்நாற்றத்தையும், சொத்தையையும் உண்டாக்கும் கிருமிகளில் 85 சதவிகிதத்தை ஒழித்துவிடுகிறது.

கால்கேட், 10ல் 7 சந்தர்ப்பங்களில் உடனடியாக வாய் துர்நாற்றத்தை அகற்றுகிறது என்பதையும், உணவு உட்கொண்டவுடன் கால்கேட்டினுல் பற்களைத் துலக்கும் முறையால், இதுவரை பற்பசை வரலாற்றிலேயே கண்டிராத பெருமளவில் ஏராளமானவர்களுக்குச் சொத்தை தடுக்கப்படுகிறது என்பதையும் விஞ்ஞான ஆராய்ச்சிகள் நிரூபித்துள்ளன. இந்த சாதனை கால்கேட் ஒன்றுக்குத்தான் உண்டு!

கால்கேட்டின் நீடித்திருக்கும் நூதன நறுமணத்திற்காக, குழந்தைகள் அதனுலேயே பல் துலக்க விரும்புகிருர்கள்!

நீங்கள் பற்பொடியை விரும்பினுல் இந்தப் பலன்கள் அனைத்தையும் கால்கேட் டுத் பவுடர் மூலம் அடையலாம். ஒரு டப்பி பல மாதங்களுக்கு வரும்.







பரிசுத்தத்திற்கும், வாயில் நறுமணம்கமழவும், வெண்மையான பற்களைப் பெறவும் வழக்கமாக கால்கேட்டினுல் பல்துலக்குங்கள்

...உலகிலேயே பெரும்பாலானவர்கள் மற்றெல்லாப் பற்பசைகளையும் விட, கால்கேட் டெண்டல் கிரீமையே வாங்குகிறுர்கள்.

# மகாபாரதம் ராஜாஜி

மந்தபாலர் என்கிற ஒரு ரிஷி ஒழுக்கம் தவறாமல் ஆயுள் முழுதும் பிரமச்சரிய விரதத்தைக் காப்பாற்றிவிட்டு இறந்தார். அவர் மேலுலகம் சென்றபோது ''புத்திர சந்தானம் உண்டாக்காமல் வந்தவர்களுக்கு இங்கே இடமில்லை'' என்று வாயில் காப்போர்களால் திருப்பி அனுப்பப்பட்டார். அதன்மேல் அவர் சாரங்கப் பட்சியாகப் பிறந்து ஜரிதை என்கிற பெண் பறவையுடன் கூடினார். அது நான்கு முட்டைகளை இட்டவுடன் அவர் ஜரிதையை விட்டுவிட்டு லபிதை என்ற மற்றொரு பெண் சாரங்கப் பறவையுடன் சேர்ந்தார்.

ஜரிதையின் நான்கு முட்டைகளும் பொரிந்து குஞ்சுகளாயின. அவையே மேலே சொன்னவாறு காடு தீப்பற்றி எரியும்போது, ரிஷிக்குப் பிறந்த குஞ்சுகளானபடியால் இவ்வாறு தாய்க்குத் தைரியத்தை உபதேசித்தன.

தாய்ப் பறவை குஞ்சுகளுக்குச் சொல்லிற்று: ''இந்த மரத்துக்குப் பக்கத்தில் ஒரு எலிப் பாழி இருக்கிறது. அந்த வளை வாயிலுக்குள் உங்களை விடுகிறேன். நீங்கள் மெல்ல உள்ளே நுழைந்து போய்ப் பதுங்கியிருங்கள். நெருப்புப் படாமல் க்ஷேமமாயிருக்கலாம். வளையின் வாயை நான் மண்ணைப் போட்டு மூடி விடுகிறேன். அனல் உங்களை எட்டாது. இந்தக் காட்டுத் தீ அணைந்ததும் நான் வந்து மண்ணை எடுத்துத் தள்ளி உங்களை உயிருடன் விடுவிப்பேன்.''

தாய் சொன்னதைக் குஞ்சுகள் ஒப்பவில்லை. ''வளைக்குள் இருக்கும் எலி எங்களைத் தின்றுவிடும். நெருப்பில் சாவது மேலானது. எலியால் தின்னப்பட்ட இழிவான முடிவு எங்களுக்கு வேண்டாம்'' என்றன.

''இந்த வளையிலிருந்த எலியைப் பருந்து ஒன்று தூக்கிப் போனதை நான் பார்த்தேன். வளையில் உங்களுக்கு அபாயம் இல்லை'' என்று தாய்ப் பறவை சமாதானம் சொல்லிற்று.

ஆயினும் குஞ்சுகள் ஒப்பவில்லை. ''வேறு எலிகள் வளையில் கட்டாயம் இருக்கும். ஒரு எலி மட்டும் பருந்துக்கு இரையாகி விட்டதனால் அபாயம் தீர்ந்துவிடவில்லை. நீ உயிரைக் காப்பாற்றிக் கொள். நெருப்பு வேகமாக வந்து கொண்டிருக்கிறது. இந்த மரத்தைச் சுற்றிக் கொள்ளுவதற்குமுன் நீ பறந்து போ. வளைக்குள் நுழைந்து பதுங்க எங்களால் முடியாது. எங்களுக்காக வருந்தி நீயும் ஏன் உயிர் விடுகிறாய்? நீ யார்? நாங்கள் யார்? நாங்கள் உனக்கு என்ன உதவி செய்தோம்? ஒன்றுமில்லை. நாங்கள் பிறந்து உனக்குக் கஷ்டம்தான் கொடுத்தோம். நீ எங்களை விட்டுவிடு. நீ இன்னும் சிறு வயது. யௌவனம் தீரவில்லை. நீ பர்த்தாவை அடைந்து க்ஷேமமாக இரு. நாங்கள் அக்கினியில் எரிக்கப்பட்டு இறந்தால் நல்ல உலகங்களை அடைவோம். உயிருடன் தப்பினால் நெருப்பு அணைந்த பிறகு நீ வந்து எங்களைப் பார்க்கலாம். நீ உடனே போய்விடு'' என்று குஞ்சுகள்



வற்புறுத்தவே தாய்ப் பறவை பறந்து போயிற்று.

தீயானது அந்த மரத்தைப் பற்றிற்று. பறவைக் குஞ்சுகள் மனங் கலங்காமல் ஆபத்தை எதிர்பார்த்துக் கொண்டு ஒன்றோடொன்று சம்பாஷணை செய்து கொண்டிருந்தன.

''அறிவுள்ளவன் கஷ்ட காலம் வரும் போது முந்தியே தெரிந்துகொண்டு மனத்தை ஸ்திரப்படுத்திக் கொள்ளுகிறான். ஆபத்து வரும்போது கலங்க மாட்டான்'' என்றது மூத்த குஞ்சு.

''நீ தீரன். மேதாவி. பலரில் ஒருவன்தான் உன்னைப்போல் தைரியமாக இருப்பான்'' என்றன தம்பிக் குஞ்சுகள்.

சிரித்த முகத்துடன் அக்கினியை எல்லாம் துதி செய்தன.

''அக்கினியே! எங்களுடைய தாய் போய்விட்டாள். தந்தையைஎங்களுக்குத் தெரியாது. நாங்கள் முட்டையை விட்டு வெளியே வந்த பின் அவரைக் காணவில்லை. புகையை துவஜமாகக் கொண்ட ஆதி தெய்வமே! இன்னும் சிறகு முளைக்காத பறவைக் குஞ்சுகளாகிய எங்களுக்கு நீயே கதி. வேறு ஆதரவு யாரும் இல்லை. எங்களை ரக்ஷிப்பாயாக. உன்னைச் சரண் புகுந்தோம்'' என்று அக்கினியைப் பிரார்த்தித்து வேதம் ஓதிய பிராமணப் பிரம்மசாரிகளைப் போல் துதி செய்தன.

மரத்தில் பற்றிய தீயானது பறவைக் குஞ்சுகளைத் தீண்டவில்லை. காட்டையெல்லாம் தாவி நிர்மூலம் செய்துவிட்டு அணைந்தது. அந்தப் பறவைக் குஞ்சுகள் சாகவில்லை.

நெருப்பு அணைந்த பிறகு தாய்ப் பறவை அவ்விடம் வந்து குஞ்சுகள் க்ஷேமமாய்ப் பேசிக் கொண்டிருக்கிற மரத்தைக் கண்டது. அவற்றை ஒவ்வொன்றாகத் தழுவி முத்தமிட்டு மகிழ்ச்சிப் பரவசத்தில் ஆழ்ந்தது.

ஆண் பறவையானது தன் புது மனைவி லபிதையிடம், ''ஐயோ! என் குஞ்சுகள் தீக்கு இரையாகியிருக்குமோ?'' என்று வருத்தப்பட்டு அடிக்கடி அலறிக் கொண்டிருந்தது. அதற்கு லபிதை என்கிற அந்தப் பெண் பறவை. ''அப்படியா? உம்முடைய சமாசாரம் எனக்கு நன்றாகத் தெரியும். இப்பொழுது ஜரிதையிடம் போக வேண்டும் என்று உமக்கு ஆசை போயிருக்



கிறது. என்மேல் வெறுப்பு உண்டாகியிருக்கிறது. பொய்யாக ஏன் நெருப்பையும் குஞ்சுகளையும் காரணமாகச் சொல்லுகிறீர்? நீர் தான் முந்தியே சொல்லியிருக்கிறீரே! ஜரிதையின் குஞ்சுகளை அக்கினி எரிக்காது; உமக்கு அக்கினி தேவன் வரம் தந்திருக்கிறான் என்று சொன்னீரல்லவா? என்னை விட்டு விட்டு உமக்கு அன்பான ஜரிதையிடம் போக வேண்டுமானால் உண்மையைச் சொல்லிப் போகலாமே! நம்பத்தகாத கெட்ட புருஷர்களை அடைந்து ஏமாற்றப் பட்ட பெண்களில் நானும் ஒருத்தியாகக் காட்டில் சஞ்சரிப்பேன். நீர் போகலாம்'' என்று கோபமாகக் கூறியது.

''நீ எண்ணுவது சரியல்ல'' என்றது மந்தபாலப் பறவை. ''நான் புத்ர சந்தானத்துக்குத்தான் பறவைப் பிறப்பு எடுத்தேன். குஞ்சுகளைப் பற்றித்தான் எனக்குக் கவலை! போய்ப் பார்த்து வருகிறேன்'' என்று புது மனைவிக்குச் சமாதானம் சொல்லி ஜரிதை இருந்த மரத்தண்டை சென்றார்.

ஜரிதை புருஷன் வந்ததைக் கவனிக்கவேயில்லை. குஞ்சுகளை உயிருடன் அடைந்த சந்தோஷத்திலேயே மூழ்கியிருந்தது. பிறகு புருஷனைப் பார்த்து, ''ஏன் வந்தீர்?'' என்று அசிரத்தையாகக் கேட்டது.

''என் குஞ்சுகள் சுகமா? இவற்றில் எது மூத்த புத்திரன்?'' என்று மந்தபாலர் பக்கத்தில் வந்து அன்பாகக் கேட்டார்.

அப்போது ஜரிதை, ''யார் ஜேஷ்டனானால் அவன் உமக்கு ஆவது என்ன? இளையவனானால் ஆவது என்ன? ஒரு துணையுமில்லாமல் என்னை விட்டுவிட்டு எவளைத் தொடர்ந்து சென்றீரோ அவளிடம் போய்ச் சேரும். சுகமாக அவளிடம் இருக்கலாம்'' என்றது.

''புத்திரர்களைப் பெற்ற பின் ஸ்திரீ, புருஷனையும் லட்சியம் செய்யாள். இது உலக சுபாவம். ஒரு குற்றமும் அறியாத வசிஷ்டரைக்கூட அருந்ததி இவ்வாறு உதாசீனம் செய்தாள்'' என்றார் மந்தபாலர்.

## 20. ஜராசந்தன்

இந்திரப் பிரஸ்தத்தில் பாண்டவர்கள் மிகச் சிறப்பாக ராஜ்ய பரிபாலனம் செய்து வந்தார்கள். யுதிஷ்டிரன் ராஜசூய யாகம் நடத்தி அரசர்க்கரசன் என்கிற பதவியைப் பெறவேண்டும் என்று அவனைச் சூழ்ந்தவர்கள் ஆசைப்பட்டார்கள். அக்காலத்திலும் சாம்ராஜ்ய மோகம் ரொம்ப இருந்ததாகக் காண்கிறது.

இந்த விஷயத்தைப் பற்றி யோசனை செய்வதற்காகக் கிருஷ்ணனுக்குச் சொல்லியனுப்பினான், தருமபுத்திரன். தன்னைப் பார்க்க விரும்புவதாகச் செய்தி வந்ததும் ஜனார்த்தனன்* துவாரகையிலிருந்து வேகமான குதிரைகளைப் பூட்டிய வாகனம் ஏறிப் புறப்பட்டு இந்திரப் பிரஸ்தம் வந்து சேர்ந்தான்.

''ராஜசூய யாகம் செய்யும்படியாகச் சிநேகிதர்கள் சொல்லுகிறார்கள். எவன் எல்லா ராஜாக்களாலும் பூஜிக்கப் படுகிறானோ அவனே ராஜசூயம் செய்யவும் அரசர்க்கரசனாகவும் தகுதியடைந்தவன். நீர்தான் இதைப்பற்றி எனக்குச் சரியான யோசனை சொல்லும் தன்மை வாய்ந்தவர். மற்றவர்களைப் போல் நீர் வெறும் சிநேகிதத்தால் என்னிடமுள்ள குறைகளைப் பாராமல் பட்சபாதமாகப் பேசமாட்டீர். சொந்த லாபத்துக்கும், கேட்கிறவனுக்குப் பிரியமாக இருக்கும் என்ற எண்ணம் கொண்டும் உண்மைக்கு மாறான யோசனை சொல்லுவது மனிதர்களுடைய சுபாவம். நீர் அவ்வாறு செய்ய மாட்டீர்'' என்று யுதிஷ்டிரன் கூற, கிருஷ்ணன் பதில் சொன்னான்:

''மகத நாட்டு ராஜாவான ஜராசந்தன் மற்ற அரசர்களை யெல்லாம் ஜெயித்துத் தன் வசப்படுத்திக்கொண்டிருக்கிறான். அவனுடைய பராக்கிரமத்தினால் க்ஷத்திரியர்கள் எல்லோரும் அவனைக் கண்டு பயந்தும் பணிந்தும் நிற்கிறார்கள். பலசாலிகளான சிசுபாலன் முதலியவர்களும் அவனை ஆசிரயித்து வருகிறார்கள். ஜராசந்தன் இருக்கும்வரையில் வேறொருவன் எவ்வாறு ராஜாதிராஜப் பதவியை அடைய முடியும்? உக்கிரசேனன் மகனான கம்சனைப் பற்றி உனக்குத் தெரியுமல்லவா? அவன் ஜராசந்தனுக்கு மருமகனும் துணையரசனும் ஆன பின், நானும் என் குலத்தவரும் ஜராசந்தனை எதிர்த்தோம். மூன்று வருஷ காலம் ஓயாமல் அவனுடைய சேனையைத் தாக்கினோம். தோல்வியடைந்தோம். அவனுடைய பயத்தினால் வட மதுரையை விட்டு விட்டு மேற்கே துவாரகையில் கோட்டையும் நகரமும் புதிதாகக் கட்டிக் கொண்டு க்ஷேமமாக இருந்து வருகிறோம். நீர் ராஜாதிராஜப் பட்டம் பெறுவதைத் துரியோதனன், கர்ணன் முதலியோர் ஆக்ஷேபிக்காமல் இருந்தாலும் ஜராசந்தன் எதிர்ப்பான். யுத்தமின்றி ஒப்ப மாட்டான். எவராலும் தோல்வி என்பதை அறியாத ஜராசந்தன் இருக்கும்வரை

* ஜனார்த்தனன் — கிருஷ்ணன்.

யில் நீர் ராஜசூயம் நடத்த இயலாது. அவனை எப்படியாவது வதம் செய்து, அவனால் சிறையில் வைக்கப்பட்டிருக்கும் அரசர்களைச் சிறையிலிருந்து மீட்டால், நாம் ராஜசூயம் நடத்தலாம்'' என்றான்.

இவ்வாறு கண்ணன் சொன்னதைக் கேட்ட யுதிஷ்டிரன், ''நீர் சொல்வது சரியே. தத்தம் நாட்டில் சிறப்புடன் வாழும் அரசர்கள் என்னைப் போல் அநேகர் இருக்கிறார்கள். அடைய முடியாத பதவியைப் பற்றி ஒருவன் ஆசைப்படுவதில் பயனில்லை. சம்ராட் பதவியை என்னைப் போன்றவன் விரும்புவது தவறு. கடவுள் படைத்திருக்கும் இந்தப் பூமி மிகப் பெரியது. அளவிறந்த செல்வம் கொண்டது. தத்தம் நாட்டில் அரசு புரிந்து கொண்டு அநேக ராஜாக்கள் திருப்தியாக இருக்க முடியும். ஆசைக்கு அளவில்லை. ஆகையால் நான் இந்த சாம்ராஜ்யப் பதவி யோசனையை விட்டுவிட்டு, இருப்பதை வைத்துக் கொண்டு திருப்தியாக இருப்பதே நலம். பீமன் முதலானோர் இந்தப் பதவிக்கு ஆசைப்படுகிறார்கள். ஜராசந்தனைக் கண்டு நீரே பயந்திருக்க, நாங்கள் எம்மட்டு?'' என்றான்.

தருமபுத்திரனுடைய அடக்கம் பீமனுக்குப் பிடிக்கவில்லை.

''முயற்சியே அரசர்களுக்கு விதிக்கப்பட்ட சிறப்பான குணம். தம் பலத்தைத் தாம் அறியாதவர்கள் புருஷ ஜென்மம் எடுத்துப் பயனில்லை. திருப்தியடைந்து சும்மா இருப்பது எனக்குக் கொஞ்சம்கூடப் பிடிக்கவில்லை. சோம்பலை நீக்கி ராஜநீதி உபாயங்களைத் திருத்தமாக உபயோகப்படுத்துகிறவன் தன்னைவிடப் பலவானான அரசனையும் வென்றுவிடலாம். முயற்சியும் உபாயமும் பயன் தரும். நான் பெற்றிருக்கும் தேக பலமும், கண்ணனுடைய சாதுர்யமும், தனஞ்சயனிடத்திலுள்ள சாமர்த்தியமும் ஒன்று சேர்ந்தால், எதைத்தான் செய்ய முடியாது? நாம் மூவரும் ஒன்று சேர்ந்து புறப்பட்டால் ஜராசந்தனுடைய பலத்தை அடக்கி விடலாம். நீர் சந்தேகப்பட வேண்டாம்'' என்று பீமசேனன் சொன்னான்.

''ஜராசந்தன் கொல்லப்பட வேண்டியவன் என்பதில் ஐயமில்லை. எண்பத்தாறு அரசர்களை அநியாயமாகச் சிறையில் வைத்திருக்கிறான். இன்னும் பதினான்கு அரசர்களைப் பிடித்த பின் ராஜாக்களை ஒரே சமயத்தில் யாகப் பசுக்களாகக் கொன்று, விழா நடத்த ஏற்பாடு செய்திருக்கிறான். பீமனும் அர்ஜுனனும் ஒப்புக் கொண்டால் நானும் சேர்ந்து, மூவருமாய்ப் போய், யுக்தியால் அந்தக் கொடியவனை வதம் செய்து சிறைப்பட்ட அரசர்களை விடுவிக்கலாம். இந்த யோசனை எனக்கும் சம்மதம்'' என்றான் கண்ணன்.

யுதிஷ்டிரனுக்கு இந்த ஆலோசனை சரியாகத் தோன்றவில்லை. ''சாம்ராஜ்ய பதவி மோகத்தினால் ஏமாந்து போய் என் இரண்டு கண்களைப் போலுள்ள பீமார்ச்சுனர்களை இழக்கும்படி நேரிடலாம். இந்த அபாயகரமான காரியத்துக்கு அவர்களை அனுப்ப எனக்குப் பிடிக்கவில்லை. இந்த யோசனையை விட்டுவிடுவதே நலம்'' என்றான்.

பிறகு தனஞ்சயன் பேசலானான்:

''புகழ் பெற்ற குலத்தில் பிறந்த நாம் பராக்கிரமச் செயல்களைச் செய்யாமல் வாழ்நாட்களை முடித்து விட்டு உயிர் நீப்பதில் என்ன பலன்? வேறு எல்லா நற்குணங்களிருந்தும் காரியத்தில் பிரவேசிக்க மனமில்லாத பராக்கிரமமற்ற க்ஷத்திரியர்களுக்குப் புகழில்லை. வெற்றிக்குக் காரணம் உற்சாகம்தான். செய்ய வேண்டியதை ஊக்கத்துடன் செய்தால் பாக்கியம் அடையலாம். சாதன பலன்கள் இருந்தும் ஊக்கம் இல்லாமையால் அந்தச் சாதனங்களை உபயோகிக்காமல் ஒருவன் தோல்வியடையலாம். தன் பலத்தைத் தான் அறியாமல் இருப்பதும் ஊக்கமில்லாமல் இருப்பதுமே பெரும்பாலும் தோல்விகளுக்குக் காரணம். இந்தக் காரியத்துக்கு நாம் தகுதியுள்ளவர்கள். தகுதி இல்லை என்று யுதிஷ்டிரன் ஏன் நினைக்கிறார்? விருத்தாப்பியம் அடைந்த பின் நாம் காஷாயம் தரித்து வனத்தில் விரதம் நடத்தலாம். இப்போது குலதருமத்துக்கு இயைந்து பராக்கிரமச் செயல்களில் ஈடுபடுவோம்'' என்றான்.

இதைக் கேட்ட கண்ணன் மகிழ்ச்சி அடைந்தான். ''பரத குலத்தில், குந்திக்கு மகனாகப் பிறந்த அர்ச்சுனன் வேறு என்ன யோசனை சொல்லுவான்? மரணம் அனைவருக்கும் நேர்ந்தே தீர வேண்டிய விஷயம். யுத்தம் செய்யாமல் இருப்பதனால் யாரும் மரணத்திலிருந்து தப்பினது கிடையாது. நீதி சாஸ்திரங்களின்படி தகுந்த உபாயங்களைப் பிரயோகித்துப் பிறரை வசப்படுத்திக் கொண்டு ஜயம் பெறுவதே க்ஷத்திரியனுக்கு உரித்தான கடமை'' என்றான்.

முடிவில் ஜராசந்தனை வதம் செய்வதே கடமை என்று எல்லோரும் தீர்மானித்து யுதிஷ்டிரனும் ஒப்புக் கொண்டான்.

எதிர்காலத்துக்கும் பொருத்தமான பல விஷயங்கள் பழைய மகாபாரதத்தில் அடங்கியிருக்கின்றன என்பதற்கு இந்தச் சம்வாதம் ஒன்றே போதும். **(தொடரும்)**

அனுபவம் புதுமை

# மக்களின் பண்பு நாட்டின் மாண்பு

கி. ராஜேந்திரன்



**மே**ற்கு ஜெர்மனியிலும், அமெரிக்காவிலும் நூற்றுக்கணக்கான மக்களுடன் பேசிப் பழகும் சந்தர்ப்பங்கள் எனக்குக் கிடைத்தன. அப்போதெல்லாம் என்னை மிகவும் கவர்ந்த ஒரு விஷயம் அவர்களுக்கு இருந்த சுதந்திரம் அல்ல, தங்களுக்கு இருக்கும் சுதந்திரத்தை அவர்கள் முழுமையாக உணர்ந்திருந்தது தான்!

ஜெர்மனியில் பவேரிய பாணி நாடோடிப் பாடல்கள், நடனங்கள், நாடகங்கள் ஆகியவற்றின் கதம்ப நிகழ்ச்சியொன்றைப் பார்த்தேன். பழைமையான சம்பிரதாயப்படி நடந்த அந்த நிகழ்ச்சிகளிலும் நவீன அரசியல் கருத்துக்களைப் புகுத்திக் கிண்டல் செய்து கொண்டிருந்தார்கள். அதிலும் குறிப்பாக ஜெர்மானிய ராஷ்டிரபதி லூப்கேயை அவர்கள் கிண்டல் செய்தது எனக்கு என்னவோபோலிருந்தது.

"லூப்கே அடிக்கடி உலகச் சுற்றுப் பயணம் செய்கிறாரே, ஏன் தெரியுமா?" என்று பாடியவன் கேட்டுத் தானே பதிலும் சொன்னான். "அரசாங்கச் செலவில் அவரது சுற்றுப்பயணம் நடப்பதால்தான்!"

"ராஷ்டிரபதி லூப்கே அரசியலுக்கு அப்பாற்பட்டவரல்லவா? இந்திய நாட்டின் ராஷ்டிரபதிக்கும் பிரிட்டனில் அரசிக்கும் இணையான அந்தஸ்து பெற்றவரல்லவா? அப்படிப்பட்டவரைக் கிண்டல் செய்யலாமா — அதுவும் கொள்கையைப் பற்றியல்லாமல் தனிப்பட்ட முறையில்?" என்று கேட்டேன்.

"நீங்கள் சொல்வது சரிதான். இது விஷயத்தில் மட்டுமின்றி வேறு பல அம்சங்களிலும் அமெரிக்க நாகரிகம் எங்களைப் பற்றிக் கொண்டுள்ளது" என்று பதில் கிடைத்தது.

பொதுவாகப் பார்க்கப் போனால் ஜெர்மானிய மக்கள் சமூக, அரசியல் விவகாரங்களில் மிகுந்த சிரத்தை எடுத்துக் கொள்கிறார்கள் என்று சொல்லலாம். இந்தியாவின் உணவுப் பிரச்னை, ஜனத்தொகைப் பெருக்கம், பொருளாதார நிலை, மகாராஜாக்களுக்கு மானியம் வழங்குவதுபோன்ற பல விஷயங்கள் பற்றி என்னைக் கேள்விகள் கேட்டு விளக்கம் கோரினார்கள்.

மாலை காரியாலயத்திலிருந்து வீடு திரும்பியதும் வீட்டுக்குப் பக்கத்தில் உள்ள மதுக் கடைக்கு ஆடவர்கள் போகிறார்கள். அங்கு உள்நாட்டு, அயல்நாட்டு விவகாரங்கள் குறித்துக் காரசாரமாக மனம் விட்டு விவாதிக்கிறார்கள்.

பெர்லினில் சனிக்கிழமை மத்தியானம் கடைகளெல்லாம் மூடப்பட்டுவிடுவது வழக்கம். மாலைவரை திறந்து வைக்க வேண்டும் என்று நான் அங்கே இருந்தபோது ஒரு சட்டம் இயற்றப்பட்டது. இப்படிச் சட்டம் போடுவது சரியல்ல என்று விமான நிலையத்துக்குப் போகும் வரை அரைமணி நேரத்துக்கு ஒரு டாக்ஸி டிரைவர் காரண காரியங்களை விளக்கிக் கொண்டு வந்தார். ஜெர்மானிய மொழி கேட்பதற்குச் சாதாரணமாகவே அழுத்தம் திருத்தமாக மறு வார்த்தை பேசவே இடம் இல்லாதது போல ஒலிக்கிறது. இந்த லட்சணத்தில் டாக்ஸி டிரைவர் என்னுடன் வந்த ஜெர்மானிய இளைஞருடன் காரசாரமான விவாதம் நடத்தினார். நிப்பொறிபறக்காத குறைதான்!



இது எனக்கு மிகவும் உற்சாகத்தைக் கொடுத்த போதிலும் அமெரிக்காவி லும் சரி, ஜெர்மனியிலும் சரி சுதந்திர உரிமைகள் அளவுக்கு மீறிப் பயன்படுத் தப்படுவதைக் கண்டபோது வேதனை உண்டாகத்தான் செய்தது.

அமெரிக்க டெலிவிஷனில் ஒரு காட்சியைப் பார்த் தேன். ஜானி கார்ஸன் என் பவர் நடத்தும் அந்தக் காட்சி மிகப் பிரபல மானது. அமெரிக்க ஜனாதி பதி ஜான்ஸனின் மகள்



இடது பக்கம்: அமெ ரிக்க மக்கள் விடுமு றையை உல்லாசமாகக் கழிக்கும் அதே ஆர்வத் துடன் உழைப்பிலும் ஈடுபடுகிறார்கள்.

இந்தப் பக்கத்தில்: தேர்தல் அபேட்சகரைச் சுற்றிச்சூழ்ந்ததொகுதி மக்கள். மக்களுடைய, மக்களால் உருவான, மக்களுக்காக ஏற்பட்ட அரசாங்கம் என்று வர் ணித்த லிங்கனும் அவ ருக்கு ஓர் ஞாபகச் சின் னமும். சுதந்திரம் பிறப் புரிமை என்பதை எப் போதும் நினைவூட்டியப டி இருக்கும் சிலை.







லிண்டாவை அவள் காதலன் வந்து சந்திக்கும் சமயம் என்ன நடக்கும் என்று கற்பனையில் ஈடுபட்டுக் கிண்டல் நாடகம் தயாரித்திருந்தார் அவர். லிண்டாவுடன் கூடவே எப்போதும் ஒரு சி. ஐ. டி. சென்று கொண்டிருப்பானுதலால் அந்த சி. ஐ. டி. யையும் சம்பந்தப்படுத்தி டெலிவிஷன் பார்ப்பவரையெல்லாம் சிரிப்புக் கடலில் ஆழ்த்தினுர் தயாரிப்பாளர் ஜானி கார்ஸன். நான்கூடத்தான்] சிரித்தேன். ஆனல் காட்சி முடிந்த பிறகு நான் சிந்திக்க ஆரம்பித் தேன். லிண்டா என்ன பாவம் செய்தாள்? ஜனாதிபதி ஜான்ஸனின் மகளாக அவள் பிறந் தது குற்றமா? அல்லது தன் மனம் கவர்ந்த ஒருவனைக் காதலித்துக் கரம் பிடித்தது ஒரு குற்றமா? எதற்காக அவளை இப்படிக் கேலிக் கும் பரிகாசத்துக்கும் ஆளாக்க வேண்டும்? ஒருத்தி பிரபலமாக இருக்கிறுள் என்பதா லேயே அவளைக் கிண்டல் பண்ணுவதா? என்ன மட்டமான ஹாஸ்யம் இது?

இதுவாவது பரவாயில்லே. கென்னடியின் மரணத்துக்குக் காரணம் ஜனாதிபதி ஜான்ஸனே என்பதாகக் கதை புனைந்து அதை நாடகமாக்கி நடிக்கவும் செய்தார்கள் ஒரு நாடகக் குழுவினர். அதற்குத் தடை விதித்து நிறுத்துவதற்குள் அரசாங்கம் திணறிப் போய்விட்டது.

சிக்காகோவில் நான் சந்தித்த ஸ்ரீ ஜர்க்கோ ஒரு வழக்கறிஞர். அமெரிக்கர் களுக்கு உள்ள அளவுக்கு மீறிய சுதந்திரம் பற்றி அவரைக் கேட்டேன். "அமெரிக்கா வில் நீக்ரோக்களுக்கென்று தனி சுதந்திர ராஜ்யம் வேண்டும் என்று சில நீக்ரோக்கள் பிரசாரம் செய்வது உண்மைதானே? நாட்டைத் துண்டாடுவது பற்றிப் பேசு வதை நீங்கள் எப்படி அனுமதிக்கிறீர்கள்?" என்று கேட்டேன். இதைக் கேட்டபோது தமிழகத்தில் தி. மு. க.வின் முந்தைய கொள்கையும் பின்னர் அந்தக் கட்சி தன் கொள்கையை மாற்றிக் கொள்ள வேண்டிய

சூழ்நிலே உருவானதும் என் நினைவில் இருந்தன.

ஸ்ரீ ஜார்கோ எனக்குக் கூறிய பதிலை நான் வாழ்நாள் உள்ளளவும் மறக்க முடியாது. அவர் சொன்னார் :

''சுதந்திரம் என்ற தத்துவம் அமெரிக்க மக்களின் ரத்தத்தில் ஊறிப் போன விஷயம். சுதந்திரம் என்ற பெயரால் சில அசம்பாவிதங்கள் நடப்பதைக்கூட அவர்கள் பொறுத்துக் கொள்வார்கள்; ஆனால் சுதந்திரத்தை இலவலேசமும் கட்டுப்படுத்துவதை அவர்கள் முழுமூச்சுடன் எதிர்ப்பார்கள்!''

இந்தச் சுதந்திர உணர்வுக்கு அடுத்ததாக அமெரிக்க மக்களிடம் நான் கண்டு ரசித்தது தாராளமாகக் கொடுக்கும் மனப்பான்மை. பணம் கொடுக்கிறார்கள்; உழைப்பையும் தருகிறார்கள். என்னைப் போல் அமெரிக்காவுக்குச் செல்லும் நபர்கள் ஒருவரா, இருவரா? ஆண்டுதோறும் நூற்றுக்கணக்கில் சென்று அந்நாட்டைக் கண்டு, மக்களுடன் பேசி, பயன் பெற்றுத் திரும்புகிறார்கள். அவர்களுக்கெல்லாம் பல்வேறு நகரங்களிலும் தேவையான உதவிகளைப் புரியச் சங்கங்கள் உள்ளன. குறித்த நேரத்தில் கார் எடுத்துக் கொண்டு வருகிறாள் ஒரு நங்கை. நாம் போக விரும்பும் இடத்துக்கு அழைத்துப் போய்த் திரும்பி நமது ஹோட்டலிலேயே கொண்டு வந்துவிடும் பொறுப்பை ஏற்கிறாள். டாக்ஸியில் போனால் நமக்குச் செலவு அதிகமாகும்; பஸ் பிடித்துப் போவது சிரமம், திக்குத் திசை தெரியாததால். இந்த நிலையில் இது போன்ற சேவகிகளின் உதவி பேருதவியாக இருக்கிறது.

இது போன்ற உழைப்பு தானத்தை அமெரிக்கப் பெண்மணிகள் பலர் பலவிதங்களில் தருகிறார்கள். ஆஸ்பத்திரியில் ஓய்வு நேரத்தில் பணியாற்றுவார்கள்; உலகின் பஞ்சப் பகுதிகளுக்கு அனுப்பப் பணம் திரட்டுவார்கள்; அறிவுப் பசி உள்ளோருக்கு அனுப்பப் புத்தகங்களைச் சேகரிப்பார்கள். சமூக சேவை ஓர் உயர் நாகரிகமாகி விளங்குகிறது.

நன்கொடைகள் அளிப்பதிலோ அமெரிக்க தனவந்தர்கள் போட்டி போட்டுக் கொண்டு முன்வருகிறார்கள். செல்வம் கொழிக்கும் அந்தச் சீமையிலே ஓரளவுக்குப் பணம் சேர்ந்த பிறகு அதைவிட அதிகமாக நல்ல பெயர் எடுப்பதில் மனம் ஈடுபட்டுவிடுகிறது. இதற்கு அனுசரணையாக அமெரிக்க அரசாங்கத்தின் வரி முறைகளும் உள்ளன. ஆகவே, ஏராளமான தொகைகள் நன்கொடைகளாக வழங்கப்படுகின்றன. ஆஸ்பத்திரிகளானாலும், பல்கலைக் கழகங்களானாலும், மியூஸியங்களானாலும் அவை உருவாகவும் வளரவும் தனி நபர்களின் நன்கொடைகளே பெரும்பாலும் உதவுகின்றன. வள்ளுவர் வகுத்த முறையில் பேரறிவாளன் திரு ஊருணி நீராக விளங்குவதைக் கண்ணுக்கு மெய்யாக அமெரிக்காவில் கண்டேன் நான்.

இல்லங்களையும் பொது இடங்களையும் துப்புரவாக வைத்துக் கொள்ளும் பழக்கத்தை மேலைநாடுகளிலிருந்து நாம் கற்றுக் கொள்ள வேண்டும். கடற்கரையிலும் பூங்காக்களிலும் குப்பைகூளம் என்று மாதிரிக்குக்கூட இருக்காது. ஆங்காங்கே குப்பைத் தொட்டிகள் நிறைய இருக்கும். 'என்னைப் பயன்படுத்துங்கள்' என்று அவை சொல்லிக் கொண்டே இருக்கும். 'இந்தப் பூங்கா உங்களுடையது. அதைச் சுத்தமாக வைத்திருந்தால் லாபம் உங்களுக்குத்தான்' என்று அறிவிப்புப் பலகைகள் அலறும்! 'சாலையில் குப்பை போட்டால் அபராதம் பத்து டாலர்கள்!' என்று அரசாங்க அறிக்கைகள் பயமுறுத்தியபடி இருக்கும்.

பொதுவாகப் பொது இடங்களைத் தங்களுடைய சொந்த இடங்களாக நினைக்கும் மனப்பான்மை நிறைய வளர்ந்திருக்கிறது அங்கே. அரசாங்கச் சொத்து என்பது மக்களது சொத்து என்பதை முழுமையாக உணர்ந்திருக்கிறார்கள்.

ஜப்பானில் நான் இருந்தபோது அமெரிக்கரின் வியட்நாம் கொள்கையை எதிர்த்துப் பல மாணவர்கள் ஆர்ப்பாட்டம் செய்தனர்.

ஜப்பானுக்கு அருகே உள்ள, பூகோள ரீதியில் ஜப்பானுடன் இணைத்துப் பார்க்கக் கூடிய சில சிறு தீவுகளை அமெரிக்கர் யுத்தத் துக்குப்பின் இன்று வரையிலும் தங்கள் ஆதிக்கத்திலேயே ராணுவ நோக்கில் வைத்துக் கொண்டிருக்கின்றனர். இதை எதிர்த்தும் மாணவரின் ஊர்வலமும் கோஷங்களும் நடைபெற்றன. உணர்ச்சிப் பெருக்கில் பெருங்கூட்டமாக மாணவர்கள் வந்த போது அந்த நெரிசலில் ஒரு டெலிபோன் தந்திக் கம்பம் சாய்ந்து விட்டது !

மாணவர்கள் உடனே என்ன செய்தார்கள் தெரியுமா? தங்களில் இன்ஜினீயரிங் கல்லூரியில் படிப்பவர்களை அழைத்துக் கம்பத்தை மீண்டும் சரியானபடி நிலை நிறுத்த என்ன செய்ய வேண்டும் என்று பார்க்கச் சொன்னார்கள். வேறு சிலர் தங்கள் உழைப்பை அளித்தார்கள். டெலிபோன் தொடர்புகள் கோளாறு ஏதுமின்றிச் சரியாக இருக்கின்றன என்பது ஊர்ஜிதமான பிறகு ஊர்வலம் மேலே சென்றது. கோஷங்கள் விண்ணை முட்டின !

மாணவர்களின் எதிர்ப்பு என்ற பெயரால் நம் நாட்டில் பொதுமக்களின் சொத்து அழிக்கப்படும் அட்டூழியத்தை ஜப்பானில் நிகழ்ந்த அந்தச் சம்பவத்துடன் ஒப்பு நோக்கினால் வெட்கமாக இருக்கிறது எனக்கு!

அரசினரின் சொத்து மக்களுடையது என்பது மட்டுமல்ல, அரசாங்கம் மக்களுடையது என்ற எண்ணமும் நன்கு வேரூன்றி உள்ளது அமெரிக்காவில்.

"எந்த நோக்கத்துக்காக அமெரிக்காவுக்கு வந்தீர்கள்?" என்று என்னை ஒரு ராணுவ வீரர் கேட்டார்.

"நீங்கள் அழைத்தீர்கள். வந்தேன்" என்றேன்.

"நானா? நான் உங்களை எப்போது அழைத்தேன்?"

"உங்கள் அரசாங்கம் அழைத்தது!" என்றேன்.

"ஓ! அழகாகச் சொன்னீர்கள்! வரி கொடுப்பவன் என்கிற முறையில் நானும் தான் உங்களை அழைத்தேன்; ரொம்ப சரி!" என்று சொல்லி ஆனந்தப்பட்டார் அவர்.

இதே போன்று மனம் விட்டு உண்மை பேசினால் அமெரிக்கரும் சரி, ஜெர்மானியரும் சரி அதனை மிகவும் விரும்பி ரசிக்கிறார்கள். உள்ளொன்று வைத்துப் பேசினால் மட்டம் தட்டவும் தயங்குவதில்லை அவர்கள்.

மேற்கு ஜெர்மனியில் ஒரு பிரபல பத்திரிகைக் காரியாலயத்தில் பொதுஜனத் தொடர்பு அதிகாரியுடன் பேசிக் கொண்டிருந்தேன். அந்தத் தருணத்தில் இந்தியாவிலிருந்து வந்திருந்த ஒரு நாடாளுமன்ற உறுப்பினரும் அங்கிருந்தார். அவர் இந்தியா விடுதலைக்குப் பிறகு அடைந்துள்ள "மகத்தான முன்னேற்றங்களை"ப் பற்றிப் பிரமாதமாக வருணிக்கத் தொடங்கிச் சொல்லிக் கொண்டே போனார். பட்டியல் மிக நீளமாக இருப்பதைப் பார்த்துப் புன்னகை புரிந்த அந்தப் பொதுஜனத் தொடர்பு அதிகாரி,



"உங்களுக்கு எப்பவுமே வாய் தந்துமா?"
"இல்லே......பே....பே... பே...... பேசற போது..... மட்டும்தான்.....!"

"அதெல்லாம் சரிதான். இந்தப் பிரச்னைகளுக்கு என்ன பரிகாரம் காணப் போகிறீர்கள்?" என்று கேட்டு முன்னதைவிட நீண்டதொரு பட்டியலை மளமளவென்று விரிக்கத் தொடங்கிவிட்டார்.

இந்தியாவை எதிர்நோக்கியுள்ள பிரச்னைகள் குறித்து அவர் எவ்வளவு ஆழ்ந்த கவனம் செலுத்தியிருக்கிறார் என்பதைக் கண்டு ஆச்சரியப்பட்டேன்.

எல்லாருமே இப்படி இல்லைதான் என்றாலும், அமெரிக்காவிலும், பிரிட்டனிலும், மேற்கு ஜெர்மனியிலும் உள்ள அறிஞர் பெருமக்கள் ஒரு ஜனநாயகநாடு என்ற முறையில் இந்தியாவிடம் ஆழ்ந்த அனுதாபம் கொண்டு பிரச்னைகளைக் கவனிக்கிறார்கள். சிக்கல்களைக் கடந்து இந்தியா வெற்றி பெறாமல் போனால் அது ஜனநாயகத்தின் தோல்வியாகி விடுமே என்று மிகவும் கவலைப்படுகிறார்கள்.

அறிஞர்களின் நிலை இதுவென்றால் சாமானிய மக்கள் என்ன பேசுகிறார்கள்? நம் நாட்டில் உள்ள சாதாரண மக்கள் பேசுவதைப் போலத்தான் அவர்களும் பேசுகிறார்கள்.

அமெரிக்காவில் ஒரு டாக்ஸி டிரைவர், "நீ இந்தியனா?" என்று கேட்டான்.

"ஆமாம்!" என்றேன்.

"ஆ! எனக்கு இந்தியாவைத் தெரியும். காந்தி பிறந்த தேசம்! நேருஜி ரொம்ப நல்லவர்! செய்னீர்கள் விஷயத்திலேதான் கொஞ்சம் ஏமாந்து விட்டார்! அடித்து விரட்டிவிட்டீர்களா, அந்தச் சீனர்களை? உதைத்துத் தள்ளுங்கள், சொல்கிறேன்! கம்யூனிஸ்டுகளை நம்பவே கூடாது என்



**"ஏண்டி, உலகத் தொழில் வர்த்தகக் கண்காட்சிதான் முடிஞ்சு போச்சே! இன்னும் ஏன் காதிலே அதை மாட்டிண்டிருக்கே?"**

●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●

கிறேன்! சீனர்களானால் என்ன, ரஷியர்களானால் என்ன? கம்யூனிஸ்டுகளை நம்பாதீர்கள்! அமெரிக்கர்கள் உங்கள் நண்பர்கள்! சீனப் படையெடுப்பின்போது நாங்கள் உதவவில்லையா?" என்று இந்த ரீதியில் ஆணித்தரமாகப் பேசிக்கொண்டு போனான்.

நயாக்ரா நீர்வீழ்ச்சிக்கு என்னை அழைத்துப் போய்க் காட்டிய ஒரு பெண்மணி தனது எட்டு வயதுப் பையனையும் உடன் அழைத்து வந்தாள். வழி நெடுக அவள் ஓயாமல் பேசிக் கொண்டே வந்தாள். தன் கணவனைப் பற்றியும் தகப்பனாரைப் பற்றியும் குழந்தைகளைப் பற்றியும் சொன்னாள். எனது மனைவி, குழந்தைகளைப் பற்றிக் கேட்டாள்.

இந்தியப் பெண்கள் புடவை உடுத்தும் அழகை வியந்து பாராட்டினாள். அவர்கள் திலகம் இட்டுக்கொள்வது எதற்காக என்று கேட்டாள்.

என் வீட்டில் பாத்திரம் தேய்த்துத் தரை பெருக்க ஒரு பணிப் பெண்ணும், தோட்டத்தைக் கவனித்துக் கார் துடைக்க ஓர் ஆணும் இருப்பதாகச் சொன்னபோது அவளுக்கு என் மனைவி மீது ஒரே பொறாமை!

"கடை கண்ணிக்கும் போய் வருவானா அந்த வேலைக்காரன்! அடடா! எவ்வளவு அதிர்ஷ்டக்காரி உங்கள் மனைவி! இங்கே வீட்டு வேலைகள் எல்லாவற்றையும் நானே செய்ய வேண்டியிருக்கிறது. அமெரிக்காவில் வீட்டு வேலை செய்ய ஆளே கிடைக்கமாட்டார்கள். கிடைத்தாலும் அவர்களுக்குச் சம்பளம் கொடுத்துக் கட்டி வராது!" என்று அங்கலாய்த்துப் பெருமூச்சு விட்டாள்.

"நீங்கள் ஓர் இந்தியரைக் கல்யாணம் செய்து கொண்டிருக்க வேண்டும் அடுத்த ஜென்மத்திலேனும்..." என்று நான் முடிப்பதற்குள், "மறு பிறப்பில் உங்களுக்கு நம்பிக்கை உண்டா?" என்று ஒரு கேள்வியைப் போட்டுத் தொடர்ந்து பேச ஆரம்பித்து விட்டாள் அவள்.

"அம்மணி, நீங்களும் உங்கள் தோழிகளும் பேசுவதை நிறுத்தினால் நயாக்ரா அருவி விழுகிற சத்தம்கேட்கும்!" என்று 'கைடு' ஒருவன் கூறியதாக ஒரு ஹாஸ்யத் துணுக்கு உண்டே அது கற்பனையல்ல, நடக்கக் கூடியதுதான் என்று தீர்மானித்தேன் நான்.

அந்தப் பெண்மணி கூறியது முழுக்க முழுக்க உண்மையே. மேனாடுகளில் வீட்டு வேலைகள் அத்தனையையும் கணவன்-மனைவியே செய்து கொள்ளுகிறார்கள். ஆனால் அவர்களுக்கு அலுவல்களைச் சுலபமாக்கும் விதத்தில் பல நவீன சாதனங்கள் உள்ளன.

**பி**ரிட்டனில், 'கார்டிப்' நகரில் மூன்று மாதங்களுக்கு ஒரு சர்வதேச ஹாஸ்டலில் தங்கியிருந்தேன் நான். அங்கு பாத்திரங்களைக் கழுவித் துடைத்து வைக்க எல்லோரும் முறைபோட்டுக் கொண்டு உதவ வேண்டும். ஒரு நாள் என் முறை வந்தது. ஏப்ரனை இடுப்பில் கட்டிக் கொண்டு பாத்திரங்களைக் கழுவித் துடைக்க ஆரம்பித்தேன். கண்ணாடி டம்ளர் ஒன்றினுள் துணியைக்கொடுத்து ஒரு சுழற்றுச் சுழற்றினேன். 'பட்'டென்று அது விட்டுப் போயிற்று! பீங்கான் தட்டு ஒன்றைச் சோப்புத் தண்ணீரில் முக்கி எடுத்து வலக் கரத்தால் தேய்த்தேன். இடக் கரம் வழுக்கி 'டமால்' என்று பிளேட் கீழே விழுந்து சுக்கு நூறாகியது!

"போதும் போதும்! நீங்கள் உதவினது போதும்" என்று அறிவித்து விட்டாள் அந்த ஹாஸ்டல் வார்டன். "ரொம்பத் தாங்க்ஸ்! நீங்கள் போய் வாருங்கள்!" என்றாள்.

எனக்குச் சிரிப்பு வந்துவிட்டது. அவள் கோபமும் என் சிரிப்பைக் கண்டு மறைந்தது.

"இருங்கள், இருங்கள்! உங்கள் மனைவிக்குக் கடிதம் எழுதுகிறேன். வீட்டு வேலைகள் எதையுமே செய்யக் கொஞ்சமும் லாயக்கற்றவர் நீங்கள் என்று குறிப்பிட்டு எழுதுகிறேன்" என்றாள்.

"அப்படி எழுதினால் என் மனைவி என்மீது கோபப்படவே மாட்டாள்! 'என் கணவரை இம்மாதிரியான வேலைகளை ஏன் செய்யச் சொல்கிறீர்கள்?' என்று கேட்டு உங்களைத் தான் கடிந்துகொள்வாள்!"

"அப்படியா?" என்று கேட்டு ஒன்றும் புரியாமல் விழித்தாள் அந்த வார்டன். "கணவன் வீட்டு வேலைகளில் எதையும் செய்வதில்லையா?" என்று வியந்தாள்.

"அதுமட்டுமல்ல. இந்த மாதிரி பெரிய ஹாஸ்டல் அல்லது ஹோட்டல்களில் என்ன செய்வோம் தெரியுமா? எங்கள் நாட்டில் நிறைய வாழை மரங்கள் உண்டு. வாழை இலைகளைப் போட்டு அதில் பரிமாறி விடுவோம். உண்ட பிறகு இலைகளைச் சுற்றி எடுத்து வந்து தூரப் போட்டுவிடலாம். அதுவும் வீணாகாது. மாடுகள், ஆடுகள் வந்து தின்றுவிட்டுப் போய்விடும்!"

இதைக் கேட்டதும் வார்டனுக்கு எப்படி இருந்திருக்கும் என்று யோசித்துப் பாருங்கள்! தினம் தினம் ஆயிரக் கணக்கான தட்டு, டம்ளர், கோப்பை, ஸ்பூன், ஃபோர்க் இத்தியாதி பாத்திரங்களைக் கழுவித் துடைத்து வைக்க, கட்டிக் காக்க அவதிப்படுகிற அவளுக்கு இந்த வார்டன் உத்தியோகத்தை நாம் இந்தியாவில் பார்க்கக் கூடாதா என்ற எண்ணத்தில் ஏக்கப் பெருமூச்சுக்கள் அடுத்தடுத்து எழுந்தன!

---

'மக்களின் பண்பு நாட்டின் மாண்பு' என்ற இந்தக் கட்டுரை அடுத்த இதழில் முடியும்.

# இஞ்சின்

நாளிதழ் பாணியில் கலைச் சித்திரம்

ஆசிரியர்; 'அபர்ணா'



ஈசான்ய ரயில்வேயின் விசேஷ வெளியீடு

## ஆயிரமாவது விபத்து வாகன் விழா !

சென்ற புதன்கிழமையன்று, வம்புச்சாவடி—தான்தோன்றி மங்கலம் பிரிவில் ஒரு கூட்ஸ் வண்டி தடம் புரண்டது நேயர்கள் அறிந்ததே. விபத்தில், சரக்கு வாகன்கள் பல கவிழ்ந்து போனதும் அதன் விளைவாக மூன்று நாட்கள் நேர்ப் போக்குவரத்து தடைப்பட்டிருந்ததையும் முன்னரே அறிவித்தோம். விபத்துக்குப் பின் கணக்கெடுத்துப் பார்த்ததில், 0123450 என்ற எண்ணுள்ள வாகன் விபத்துக்கு ஆளான வாகன்கள் வரிசையில் ஆயிரமாவது வாகன் என்ற தகவல் வெளிப்பட்டது. கடந்த ஞாயிற்றுக்கிழமை மாலை நாலரை மணிக்கு 'ஆயிரமாவது-விபத்து வாகன் விழா' தான்தோன்றி மங்கலம் ரயில் நிலையத்தில் சிறப்பாகக் கொண்டாடப்பட்டது.

விழாவுக்கு வந்திருந்த எல்லோரையும் டிவிஷனல் சூபரின்டெண்ட் திரு ஏ.வி.பி. மேனன் அவர்கள் வரவேற்றார். விபத்துக்காளான வண்டியின் டிரைவர், பயர்மென் இருப்புப் பாதை கண்காணிப்பாளர் ஆகியோருக்குப் பாராட்டுப் பத்திரங்களும் கேடயங்களும் அவ்வமயம் வழங்கப்பட்டன. ஒரு ரயில்வேயின் அருமை பெருமைகள் விபத்துக்கள் ஏற்படும்போதுதான் பளிச்சென்று வெளிப்படுகின்றன என்றும், எனவே இந்த விபத்துக்குக் காரணமான எல்லா ஊழியர்களையும், தாம் மனதாரப் பாராட்டுவதாகவும் தலைமை தாங்கிய மாவட்டக் கலெக்டர் கூறினார்.

விழாவுக்கு ரயில்வே மந்திரி விசேஷச் செய்தி அனுப்பியிருந்தார் என்பது குறிப்பிடத் தக்கது. -ந.நி.




பட்டணம், ஏப். 1—

ஈ. ர. தொழிலாளர்களின் கூட்டமொன்று நேற்று மாலை திரு செந்தேன் அவர்களின் தலைமையில் நடைபெற்றது. இஞ்சினில் வெப்பம் அதிகமாக இருப்பதால், அதில் குளுகுளு சாதனம் அமைக்க வேண்டு மென்றும் டிக்கட்டு இல்லாமல் மூன்று வயதுக்கு மேற்பட்ட குழந்தைகளுடன் வரும் பிரயாணிகள் தாமாகவே டிக்கட் பரிசோதகரிடம் மாட்டிக்கொள்ள வேண்டும் என்றும் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

கடைசியில் திரு வாலு அவர்கள் வசைமாரி பொழிந்ததும், சலசலப்புடன் கூட்டம் கலைந்தது.

## படத் தயாரிப்பாளர்களுக்கும் எழுத்தாளர்களுக்கும் ஓர் அரிய வாய்ப்பு !



எக்ஸ்பிரஸ் வண்டியும் மெயிலும் மோதும் காட்சியைப் படம் எடுக்க வேண்டுமா?... நின்றுகொண்டிருக்கும் கூட்ஸ் வண்டியுடன், எதிரே வந்து கொண்டிருக்கும் பாசஞ்சர் வண்டி முத்தமிடும் காட்சியைப் படம் எடுக்க வேண்டுமா? பாதையிலிருந்து தடம் புரண்டு, மோதிப் பெயர்ந்து அலங்கோலமாகப் பல வாகன்கள் கிடக்கும் காட்சியைப் படம் எடுக்க வேண்டுமா? கவலைப் படவேண்டாம்! ஈசான்ய ரயில்வே உங்களுக்குச்சேவை புரியக் காத்திருக்கிறது! எந்த நிமிஷத்திலும் ஒரு ரயில் விபத்தை ஏற்படுத்திக் கொடுத்து, தத்ரூபமாகக் காட்சிகளைப் படமெடுக்க உதவுகிறோம். எழுத்தாளர்களே, இனி கவலைப்பட வேண்டாம்! இரவு எட்டு மணிக்குப் புறப்படும் பிரயாணி வண்டியின் கார்டு, பச்சைக் கொடியைக் காட்டியதாகப் பிதற்ற வேண்டாம்! ரயில்வேக் கதை எழுத வேண்டுமானால், எங்களை அணுகுங்கள். ரயில்வேயின் சகல துறைகளுக்கும் அழைத்துச் சென்று, உங்கள் கதைகளில் உண்மை ஒளி ஊட்டுகிறோம்.

தொடர்பு கொள்க:
**ஜெனரல் மானேஜர், (வாணிபப் பிரிவு) ஈசான்ய ரயில்வே, பட்டணம்**

# இஞ்சின்

வாகன் 10 மூட்டை 11

வரி விளம்பரம்

கொள்ளை மலிவு! தோசைக் கல்! அன்றாடம் ஒர்க்ஷாப்பில் ரகசியமாகத் தயாரிக்கப்படுவது! மாலை ஐந்தரை மணிக்கு மேலண்டை வாசலில் பணத்துடன் சந்திக்க. - குமாறன்

வியாபாரிகளுக்கு ஒரு நல்ல வாய்ப்பு! போலி ரயில்வே இன்வாய்ஸ்கள் தயாரித்து அளிக்கப்படும். நேரில் வரவும்.. மூக்ராம், கருஞ்சந்தை.

நேயர் தபால்

அன்புள்ள 'இன்ஜின்' ஆசிரியருக்கு,

இப்பவும் காத்தாங்குளம் மாட்டுத் தரகு, செல்லமுத்து எழுதுவது என்னவென்றால், எங்க கிராமம் நெருஞ்சிப்பாளையம் டேஸனிலிருந்து ஒரு மயில் தொலைவில் இருக்



கிறது. அதனாலே நடந்து போக வர எங்களுக்கு ரொம்பக் கயிஷ்டமாயிருக்கு. அதிலும் என் ஊைப்போலொத்த வேம்பையனும் சின்னத்துரையும் ரொம்ப ரொம்பக் கயிஷ்டப்படறாங்க. எங்க கிராமம் ரயில் லயனை ஒட்டியே இருக்கிறதாலே எங்க கிராமத்துக்கு நேரே 'காத்தாங்குளம்'னு ஒரு ரயில் டேஸன் கட்டணுமின்னு கேட்டுக்கிறேன்.

இப்படிக்கு,
செல்லமுத்து

## அதிசயம்! ஆனால் உண்மை...!

(நமது அதிவிசேஷ வேவுகார நிருபரிடமிருந்து சற்றுமுன் கிடைத்த மிகச் சூடான தகவல்.)



ஈசான்ய ரயில்வே, தனது சிப்பந்திகளின் சௌகரியத்தை மனத்தில் கொண்டு, அவர்கள் குடியிருப்பதற்கென வீடுகள் கட்டிக் கொடுப்பது அனைவரும் அறிந்ததே.

உடையாளூர் ரயில் நிலையக் குடியிருப்பில் பத்து வீடுகள் சென்ற மாதம் நிர்மாணிக்கப்பட்டன. வீடுகள் நல்லனவையாய் அமைய வேண்டும் என்ற உயரிய நோக்குடன் வந்திருந்த டேண்டர்களில் மிக உயர்ந்தபட்சத் தொகைக்கே ஒப்பந்தம் அளிக்கப்பட்டது

ஒட்டப்பட்ட மேற்கூரையுடைய அந்தப் பத்து வீடுகளிலும் மொட்டை மாடியிலிருந்து மழைத் தண்ணீர் உட்புறம் சொட்டும் (அதாவது கொட்டும்) காட்சி மிகவும் அற்புதமாக இருக்கிறது. இத்தகைய விநோத ஒட்டுக் கட்டிடத்தை, ரயில்வே கண்ட்ராக்டர்களால் மட்டுமே கட்ட முடியும் என்று பொது மக்கள் புகழ்கிறார்கள். கட்டிட வேலையை மேற்பார்வையிட்டு வந்த ரயில்வே இஞ்ஜினியரிங் அதிகாரிக்கு மற்ற டிபார்ட்மெண்டைச் சேர்ந்த ஊழியர்கள் ஒரு பாராட்டுக் கடிதம் எழுதியுள்ளனர். விவரம் புரியாத பொதுமக்கள் பதினாயிரம் ரூபாயில் கட்டக் கூடிய வீட்டை இருபதினாயிரம் ரூபாய்க்குப் பந்தம் விட்டதன் மூலம், இஞ்ஜினியரிங் இலாகா தன் பெருமையை நிலைநாட்டிக் கொண்டு விட்டது என்றும், ஒட்டுக் கூரை வழியாக மழைத் தண்ணீர் இறங்காது என்று பன்னெடுங் காலமாய் வந்த நம்பிக்கை தகர்த்தெறியப்பட்டது ஒரு மாபெரும் சாதனை என்றும் பாராட்டுக் கடிதத்தில் கூறியுள்ளனர்.

மாநில அரசைச் சார்ந்த ஒப்பந்தக்காரர்கள் இந்த அதிசயத்தை நேரில் கண்டு அசந்து போனார்கள். பொது மக்கள் கூட்டம் கூட்டமாகச் சென்று ரயில்வே காலனியில் உள்ள பத்துப் புது வீடுகளையும் கண்டு மூக்கில் விரலை வைக்கிறார்கள். கூட்டத்தைக் கட்டுப்படுத்த, வீடுகளைச் சுற்றிப் போலீஸ் பந்தோபஸ்து செய்யப்பட்டிருக்கிறது.

## பிரயாணிகளுக்கு அதிகப்படி வசதி

ஈசான்ய ரயில்வேயில் பிரயாணம் செய்யும்போது மக்களுக்கு மேலும் மேலும் வசதிகளை ஏற்படுத்தித் தருவதில் ரயில்வே நிர்வாகத்தினர் கண்ணும் கருத்துமாக இருந்து வருகின்றனர் என்பது அனைவருக்கும் தெரிந்ததே. இன்னும் அதிகப்படியான ஒரு சலுகையை நமது ரயில்வேப் பிரயாணிகள் அடையப் போகிறார்கள் என்பது மிகவும் மகிழ்ச்சிக்குரியது.

ரயில் பெட்டிகளில் பல்புகள், ஸ்விட்சுகள், டைனமோ பெல்டுகள் முதலியன அடிக்கடி காணாமல் போய் விடுகின்றன. ரயில்வே சிப்பந்திகள் அவைகளை அமுக்கிக் கொண்டு போய் விடுகிறார்கள் என்ற கருத்து மிக பரவலாக இருந்தாலும், அவை ஒருசிலரால் திருடப்



படுகின்றன என்பதே பச்சையான உண்மையாகும். திருடிக் கொண்டு போகும் பொருள்களை மீண்டும் ரயில்வேயிடம் சேர்ப்பிக்கும் நபர்களுக்கு நன்றித் தொகை வழங்கும் திட்டம் ஒன்று இப்போது வகுக்கப்பட்டுள்ளது. அதன்படி, திருப்பிக் கொடுக்கப்படும் பல்புக்கு ஒரு ரூபாயும், டைனமோ பெல்டுக்கு இரண்டு ரூபாயும் நன்றித் தொகையாக வழங்கப்படும்.

பிரயாணிகள் அனைவரும் இந்த மாபெரும் திட்டத்தின் முழுப் பயனையும் பெறும்படி கோரப்படுகிறார்கள்.

# ரயில்வே ஊழியருக்குப் பரிசு

### ரயில்வே போர்டு தலைவர் வழங்கினார்

ஈசான்ய ரயில்வே என்ற பெயர் கொஞ்சமும் பொருத்தமாக இல்லை. ஆதலால் பெயரை மாற்றி 'ஈசூன்ய ரயில்வே' என்று வைக்கலாம் என்ற யோசனையைத் தெரிவித்த திருமதி குப்பம்மாவுக்கு ரயில்வே போர்டு தலைவர் திரு எமகண்டன், ரொக்கப் பரிசு 500 புதுக் காசுகள் வழங்கினார். திருமதி குப்பம்மா ஆளடிச்சான் பட்டி ரயில்வே டிஸ்பென்சரியில் துப்புரவாளர்.

தலைமை மெடிகல் ஆபிஸர் அவர்கள், சகோதரியின் பேரறிவையும், ஆராய்ச்சியையும் வெகுவாகப் பாராட்டினார்.








# அதிகாரிகள் மாற்றம்




வர்த்தகத் துறை முதல்வர் திரு எம். என். பானர்ஜி இம்மாதம் மூன்றாம் தேதியிலிருந்து பதினேழாம் தேதி வரை பதினைந்து நாட்கள் ரஜாவில் செல்வார்.

வர்த்தகத் துறை துணை முதல்வர் திரு வி. மல்ஹோத்ரா, முதல்வர் பணிகளைக் கவனிப்பார்.

வர்த்தகத் துறை இரண்டாமவர், திரு பிநாகபாணி, துணை முதல்வராகப் பணியாற்றுவார்.

வர்த்தகத் துறை டிவிஷனல் அதிகாரி நீர்த்தபுரிக்கு இனி, வர்த்தகத் துறை இரண்டாமவராக அலுவல்.

வர்த்தகத்துறை டிவிஷனல் உதவி அதிகாரி திரு கே. எம். ஜேகப், வர்த்தகத் துறை டிவிஷனல் அதிகாரியாகப் பதவி ஏற்பார்.

வர்த்தகத் துறை அலுவலகத் தலைமை எழுத்தர் திரு வி. ராமாச்சார், வர்த்தகத் துறை டிவிஷனல் உதவி அதிகாரியாகத் தாற்காலிகமாகப் பதவி உயர்வு அளிக்கப்பட்டுள்ளார்.

வர்த்தகத் துறை அலுவலக சீனியர் குமாஸ்தா திரு ஆர். சுந்தரக் கிருஷ்ணன், தம் அலுவல்களுடன் தலைமை எழுத்தரின் அலுவல்களையும் சேர்த்துக் கவனிப்பார்.

மேற்படி பதவி உயர்வுகள் முற்றிலும் தாற்காலிகமானவை.

### பெயர் மாற்றம்

நமது ரயில்வே அயனூர் டிவிஷனில் இஞ்சினீரிங் காரியாலய டைப்பிஸ்ட் செல்வி வயலெட்டின் பெயர், அவர் திருமணம் செய்து கொண்டதன் காரணமாக திருமதி வயலெட் கனகராஜ்



என்று எல்லாப் பதிவேடுகளிலும் மாற்றப்பட்டிருக்கிறது. திரு கனகராஜ் நமது ரயில்வேயில் ஓர் உதவி இன்ஜினியராகப் பணியாற்றி ஓய்வுபெற்றவர்.



அப்பாவிப் பிரயாணி (டிக்கட் குமாஸ்தாவிடம்): ஏன் சார், ரயில் டிக்கட் விலை ஏறப் போகுதாமே? அப்படீன்னா, எங்க ஊருக்கு இருபத்தி அஞ்சு டிக்கட் இப்பவே கொடுத்திடுங்களேன். நான் வாரா வாரம் போயிட்டுவரணும்.

## ஈசான்ய ரயில்வே (மெக்கானிகல் இலாகா) டெண்டர் அறிக்கை

எண்: பி.கே.எம். 17-34 78-99-1022-மெக்-42-இ.



தற்சமயம் திருபுரம் எக்ஸ்பிரஸில் ஓடும் இஞ்சின்கள், இம் மாதம் விற்பனைக்கு வரும். எல்லாச் சந்திப்பு நிலையங்களிலும் டெண்டர் ஃபாரங்கள் கிடைக்கும். ஒரு டெண்டர் பாரத்தின் விலை: ஒரு கிலோ பேரிச்சம் பழம். ஒப்பந்தப் புள்ளியின் கடைசிப்பட்ச மதிப்பு, பேரிச்சம் பழம் இரண்டு கூடை.

## எம்ப்ளாய்மெண்ட் நோட்டீஸ்

திர். 17-2008

ஈசான்ய ரயில்வேயின் எல்லா டிவிஷன்களிலும் அதிகப்படியாக சாங்க்ஷன் செய்யப்பட்டுள்ள பல நூறு போஸ்டுகளுக்கு விண்ணப்ப மனுக்கள் வரவேற்கப்படுகின்றன. அச்சடிக்கப்பட்டுள்ள எட்டு லட்சம் மனுக்களும் விற்பனையான பின்னர் போஸ்டுகள் தீர்மானிக்கப்படும். ஒரு பாரம் விலை: பத்து ரூபாய். மொழிப் போராட்டத்தில் ரயிலை நிறுத்திய மாணவர்களுக்கும், அபாயச் சங்கிலியைத் தம் இஷ்டம்போல் உபயோகிப்பவர்களுக்கும் தனிச் சலுகை காட்டப்படும்.

---

## கடைசித் தந்தி

நாஞ்சில்கோட்டை—புண்ணிய நகரம் இருப்புப் பாதைப் பிரிவை எடுத்து விடக் கூடாது என்று நாடாளுமன்றத்தில் கொண்டுவரப்பட்ட தனிநபர் தீர்மானம், ரயில்வே அமைச்சர் புனராலோசனை செய்வதாக வாக்களித்ததின் பேரில் வாபஸ் பெற்றுக் கொள்ளப்பட்டது.

# ஜெனரல் மானேஜர் விஜயம்

[நமது விசேஷ நிருபர்]

ஈசான்ய ரயில்வேயின் ஜெனரல் மானேஜர் அவர்கள் சமீபத்தில் தஞ்சாவூர் சந்திப்பு நிலையத்துக்கு விஜயம் செய்தார். சமசீதோஷ்ண தனிப் பெட்டியிலிருந்து காலை எட்டரை மணிக்கு ஜி. எம். வெளியே வருவார் என்று எதிர்பார்க்கப்பட்டதால், எட்டு மணி முதற் கொண்டே அவருடைய காரேஜைச் சுற்றி டிவிஷனல் அதிகாரிகள் குழுமத் தொடங்கினார்கள். சரியாக ஒன்பது மணிக்கு ஜி. எம். வெளியே வந்தார். இரவு முழுவதும் பிரயாணம் செய்த அசதி அவர் முகத்தில் காணப்பட்டது. எல்லோருடைய வணக்கத்தையும் தலையசைப்புடன் ஏற்றுக் கொண்ட அவர், பிளாட்பாரத்தை நோக்கி நடந்தார். முன்தினம் இரவு வர்ணம் பூசப்பட்ட இரும்புக் கம்பங்களும், சுவர்களும் கண்ணுக்கு விருந்தாய் அமைந்தன. நேரே உணவுச் சாலைக்குள் ஜி.எம். நுழைந்தார். அங்கே எல்லா அதிகாரிகளுக்கும் காப்பி வழங்கப்பட்டது. காப்பி அருந்தியதும் ஜி. எம். ஏதோ முணுமுணுத்தார். 'ஏ, ஒன்!... இந்தக் காப்பியையா பிரயாணிகள் தூற்றுகிறார்கள்? இந்த மாதிரிக் காப்பிக்கு எட்டணுவானுலும் நான் கொடுப்பேன்!' என்று அவர் கூறியதாக ஓர் அதிகாரி பின்னர் கூறினார்.



அதிகாரிகள் புடை சூழ, ஜி. எம். மேம்பாலம் வழியாக வெளியே வந்தார். நகர வர்த்தகப் பிரமுகர் அன்பு கூர்ந்து அனுப்பியிருந்த இரண்டு கார்களில் தம் குடும்பத்தினருடன் ஜி. எம். ஏறிக் கொண்டார்.

கோவில்கள், கலைக்கூடம் பழைய கோட்டை அணைக்கட்டு ஆகிய இடங்களுக்குச் சென்றுவிட்டு, இரவு எட்டு மணிக்குத் திரும்பிய ஜி.எம் உடனே மற்ற அதிகாரிகளுக்கு விடை கொடுத்து அனுப்பி விட்டார். மெயிலில் அவருடைய தனிப் பெட்டி கோக்கப்பட்டதும் இரவு மணி பத்தாயிருந்தும், எழுந்து வந்து, பிளாட்பாரத்தில் நின்று கொண்டிருந்த நிலையத் தலைவரை அழைத்தார். 'எனக்கு ரொம்பத் திருப்தி. ஸ்டேஷனை நன்றாக நடத்துகிறீர்கள்... இந்த ஸ்டேஷனைப் பார்வையிட்டதில் எனக்கு மகிழ்ச்சி...' என்று கூறிக் கை குலுக்கி விடையளித்தார்.

---

அச்சிட்டு வெளியிடுபவர்: ஈ.ர.வின் பொதுஜனப்பகை அதிகாரி, தலைமைக் காரியாலய மொட்டை மாடி, பட்டணம்.

---

### ஒரு திருத்தம்

இவ்விதழின் வேறொரு பக்கத்தில் வெளியாகியுள்ள 'அதிகாரிகள் மாற்றம்' பகுதியில் கடைசியாகப் பின்வருவதைச் சேர்த்துக்கொள்க:

வர்த்தகத்துறை முதல்வர் திரு எம். என். பானர்ஜியின் ரஜா ரத்து செய்யப்பட்டு விட்டது.

# குழந்தை இல்லாமல் ஒரு வீடா?
# குதூகலம் இல்லாமல் ஒரு குழந்தையா?
# பாரி மிட்டாய் இல்லாமல் குதூகலமா?

ம்ம்ம்...பாரி மிட்டாய்கள்
அடக்கமுடியாத ஆவலைத்
தூண்டுபவை. ருசிமிக்கவை,
சத்துள்ளவை. குழந்தைகளோடு
ருசித்து மகிழுங்கள், வாழ்வின்
சுவையை அப்போது
உணர்வீர்கள்.

புதிதாக வந்துள்ள மிட்டாய்
வகைகளைச் சுவைத்தீர்களா?
ஆரஞ்ரோல்ஸ்•பிளாக் கரன்ட்ஸ்•
பைனாப்பிள் டாபி•க்ரீமிரோல்ஸ்




பாரிஸ் உயர்தரமான
மிட்டாய்
தயாரிப்பாளர்கள்

பாரிஸ் கன்பெக்ஷனரி லிமிடெட், மதராஸ்

PRS-4417



# குஸ்தியில் முடியும் குதிரைப் பந்தயம்!

இந்தியாவில் அண்மையில் நடைபெற்ற 'ஜாக் பாட்' குதிரைப் பந்தயம் பெரிய பரபரப்பை ஏற்படுத்தியது. ஆனால் ஸியன்னாவில் நடக்கும் விசித்திரமான குதிரைப் பந்தயம்போல் உலகில் வேறு எங்குமே காண முடியாது!

உலகெங்கிலும் பற்பல நாடுகளில் ஆண்டு தோறும் குதிரைப் பந்தயங்கள் நடத்தப்படுகின்றன. ஆனால் ஆண்டுக்கு இரு முறைகள் இத்தாலி நாட்டில் உள்ள ஸியன்னா நகரில் நடத்தப்படும் 'பாலியோஸ்' (Palios) என்ற குதிரைப் பந்தயம் மிகவும் விசித்திரமானது, வேடிக்கையானது, பைத்தியக்காரத்தனமானது என்றுகூடச் சொல்லலாம்!

பாலியோஸ் பந்தயத்தின் லட்சியமே ஒரு அடி நீளமும் அரை அடி அகலமும் உள்ள கையால் வரையப்பட்ட கன்னி மேரியின் திருவுருவம் கொண்ட பட்டுத் துணியைப் பரிசாகப் பெறுவதுதான். சுமார் இருபது ரூபாய்கள் மதிப்புள்ள இந்தப் பட்டுத் துணியைப் பெறுவதற்காகப் பாலியோஸ் பந்தய நிகழ்ச்சிகளில் எத்தனையோ மோசடிகள் 1659ம் ஆண்டு முதல் இன்றுவரை நிகழ்ந்து கொண்டேயிருக்கின்றன.

அறுபதினாயிரம் மக்கள் வாழும் ஸியன்னா நகரில் ஜூலை 2ம் நாளன்றும் ஆகஸ்ட் மாதம் 16ம் நாளன்றும் நகரில் உள்ள பிரதான சதுக்கமான 'பியாஸா டெல் காம்போ' என்ற இடத்தில் ஆண்டுதோறும் பாலியோஸ் நடத்தப்படுகிறது. ஸியன்னா நகரம் பதினேழு மாவட்டங்களாகப் பிரிக்கப் பட்டுள்ளது. அந்த மாவட்டங்களிலிருந்து பதினைந்து முதல் இருபது குதிரைகள்வரை பாலியோஸில் கலந்து கொள்ளுகின்றன.

பதினேழு மாவட்டங்களில் ஏதாவது ஒன்று அந்த ஆண்டு பந்தயத்தில் வெற்றி பெற வேண்டும் என்று விரும்பினால் அம்மாவட்ட மக்கள் அதற்காக நிதி திரட்டி மிகச் சிறந்த சாரதியை அமர்த்துகின்றனர். அது மட்டுமன்றி மற்றச் சாரதிகளையும் 'விலைக்கு' வாங்கி அவர்களைப் பந்தயத்திலிருந்து அகற்றி விடவும் முயலுகின்றனர். முடிந்தால், மற்ற மாவட்டப் பந்தயக் குதிரைகளை இரவோடு இரவாக அடித்துக் காயப்படுத்தியும் விடுவர்!

இதனால் ஒவ்வொரு மாவட்டத்தினரும் தத்தம் குதிரையையும் சாரதியையும் பலத்த காவலில் வைத்திருப்பார்கள்.

பாலியோஸ் நாளன்று அந்தந்த மாவட்ட அதிகாரிகள் குதிரைகளையும் சாரதிகளையும் அழைத்துக் கொண்டு தத்தம் தேவாலயங்களில் வெற்றிக்காக இறைவனைப் பிரார்த்திக்கின்றனர். அதன் பின்னர் தேவாலயங்களிலிருந்து அவர்கள் ஊர்வலமாக அணிவகுத்துப் பந்தயப் பூமியை அடைகின்றனர்.

பாலியோஸ் பந்தயத்தில் ஒரு விசித்திரமான விதியுண்டு. அதன்படி சாரதியில்லாமல் குதிரைமட்டுமே எல்லாவற்றுக்கும் முன்னதாக வந்தால் அதுதான் வெற்றி பெற்றதாகக் கருதப்பட்டுப் பரிசு வழங்கப்படும். இது உலகில் எந்தக் குதிரைப் பந்தயத்திலும் இல்லாத ஒரு விதியாகும். 1947ம் ஆண்டில் நடந்த பாலியோஸ் பந்தயத்தில் ஸலோமி என்ற குதிரை பந்தயம் தொடங்கியவுடன் சாரதியைக் கீழே தள்ளிவிட்டு எல்லாவற்றுக்கும் முன்னதாக வந்து வெற்றி பெற்றது!

பந்தயத்தில் ஏராளமாகப் பணத்தைக் கட்டித் தோற்றவர்களிடம் பந்தயம் முடிந்த பிறகு வெற்றி பெற்ற சாரதி உதை வாங்குவது வழக்கம்! ஆயிரக்கணக்கான போலீஸ்காரர்கள் அந்தச் சாரதியைக் காப்பாற்ற முயன்றாலும் இதுவரை உதை வாங்காத சாரதி எவருமே இல்லை எனலாம்!

பந்தயம் முடிந்தபிறகு இரவு வெற்றி பெற்றவர்கள் ஊர்வலமாக நகரை வலம் வருவார்கள். அப்போது எதிர்ப்படும் தோற்ற மாவட்டத்தினரை அவர்கள் கேலி செய்ய, உடனே துவந்த யுத்தம் தோற்றவர்களுக்கும் வென்றவர்களுக்கும் இடையில் நிகழும்! பாலியோஸ் பந்தயத்தின்போது ஸியன்னா நகரமே கிட்டத்தட்ட ஒரு பைத்தியக்கார நகராக இருக்கும்! ஆஸ்திரிய நாட்டின் ஐந்தாம் லியோபால்ட் பிரபுவிடம் பத்தொன்பதாம் நூற்றாண்டில் ஸியன்னா நகர மக்கள் ஸியன்னா நகருக்கு என ஒரு பைத்தியக்காரர் விடுதி கட்டித் தரவேண்டும் என்று வேண்டிக் கொண்டபோது அவர் கூறினார்: ''உங்கள் வீடுகளே கிட்டத்தட்ட பைத்தியக்கார விடுதி போலத்தானே இருக்கும்!'' - அ. இராமதுரை





## சுவையான சர்ச்சைகள்



# கூட்டுக் கல்வி கூடாது!

"ஒரு பெண்ணைப் படிக்க வைப்பது ஒரு குடும்பத்துக்கே கல்வி வசதி அளிப்பதாகும். படித்த பெண்மணி தன் குழந்தைகளுக்கெல்லாம் நல்லறிவு புகட்டுவாள்; பண்பை ஊட்டி வளர்ப்பாள். இதனால்தான் பெண் கல்வியின் அவசியத்தைச் சான்றோர்கள் பலர் வற்புறுத்தியுள்ளார்கள். பெண்களுக்கு எத்தகைய கல்வி அளிப்பது என்பது குறித்துப் பெற்றோர்கள் எவ்வாறு சிந்திப்பார்களோ அவ்வண்ணமே எந்தச் சூழ்நிலையில் அவர்கள் பயில வேண்டும் என்பதையும் சிந்தித்து முடிவு செய்ய வேண்டியது முக்கியம். பத்து வயது முதல் இருபது வயது வரையுள்ள பெண்கள் தக்க சூழ்நிலையில் பயில வேண்டியது அவசியம். தக்க சூழ்நிலை என்று கூறும்போது ஆண் — பெண் இருபாலாரும் ஒரே பள்ளியில் பயிலாமல் தனித் தனிப் பள்ளிகளில் பயில வேண்டியதன் அவசியத்தையே குறிப்பிடுகிறேன். விவரம் தெரியாத பருவத்தில் மாணவர்களும், மாணவியரும் ஒரே கல்விக் கூடத்தில் படிப்பது இரு பாலாருக்குமே நல்லது அன்று. தீயின் அருகில் பஞ்சை வைப்பது போன்றதாகும், கூட்டுக் கல்வி (Co-Education)" எனக் கூறுகிறார் லயோலாக் கல்லூரி ரசாயனப் பேராசிரியர் திரு. ஏ. ஸ்ரீநிவாசன்.

"மழை பெய்து வெள்ளம் பெருக்கெடுத்து வருகின்றதே அதைப் போன்றதுதான் கல்வியும். கட்டுப்படுத்தி நல்வழியில் செலுத்தினால் விளைவு சிறப்பாக இருக்கும். பத்து வயதுக்குட்பட்ட சிறுவர் சிறுமியரை — அவர்கள் பெரும்பாலோர் ஆரம்பப் பள்ளியில் படிப்பவர்களாகவே இருப்பார்கள். — ஒரே பள்ளியில் பயில அனுமதிப்பதில் ஆபத்து ஒன்றுமில்லை. ஆனால் பத்து வயதுக்கு மேற்பட்ட பெண்கள் — குறிப்பாகப் பருவம் எய்திய பின் — ஆண்களுடன் சேர்ந்து பயிலாமல் இருப்பதுதான் நல்லது. இந்த வயதில் பருவத்தின் சேஷ்டைகள் அதிகமல்லவா? விளைவைப் பற்றிச் சிந்தியாமல் முடிவெடுக்கிற பருவம் இது. தன்னைத் தானே நன்கு உணராத பருவம். இந்தப் பருவத்தில் ஆண் - பெண் இரு பாலாரும் ஒரே பள்ளியில் கூட்டுக் கல்வி பயில்வது விரும்பத்தகாதது. ஆண்களும் பெண்களும் இப்பருவத்தில், நெருங்கிப் பழக வாய்ப்பு அளிப்பது விபரீதமாக முடியும். இது நமது பண்புக்கும் கலாசாரத்துக்கும் ஒத்து வராது. விபரீதம் விளைந்த பின் கையைப் பிசைந்து கொண்டு நிற்பதை விட, முன்கூட்டியே சிந்தித்து எச்சரிக்கையாக இருப்பது விவேகமல்லவா?"

"கண்ணியம், கட்டுப்பாடு, அடக்கம்—இவைகளெல்லாம் பாரதப் பெண்களின் அருங்குணங்களாயிற்றே? ஆண்களுடன் சேர்ந்து பயில்வதால் பெண்கள் நெறி தவறி விடுவார்களா? கூட்டுக் கல்வி முறை பெண் குலத்தின் பெருமைக்குக் குந்தகம் விளைவிக்கும் என்று கருதுகிறீர்கள்?"

"பாரதப் பெண்களுக்கே உரித்தான அரிய பண்புகளை நான் மறந்துவிடவில்லை. கால ஓட்டத்தில் நாகரிகமும் நமது பழக்க வழக்கங்களும் எப்படி யெல்லாமோ மாறி வருகின்றன. இருபது வருடங்களுக்கு முன் பெண்கள் எப்படி உடையணிந்தார்கள், எப்படித் தங்களை அலங்காரம் செய்து கொண்டார்கள், இப்போது எவ்விதம் உடுத்துகின்றனர், எம் மாதிரியெல்லாம் ஒப்பனை செய்து கொள்ளுகின்றனர் என்று ஒப்பிட்டுப் பாருங்கள்! இருபது, இருபத்தைந்து ஆண்டுகளுக்கு முன்னர் தமிழ்ப் படங்கள் எப்படி இருந்தன, இப்போது எவ்வாறு மாறியுள்ளன என்பதையும் எண்ணிப் பாருங்கள். கதாநாயகன் கதாநாயகி கட்டிப் புரள்வதும் குதிப்பதும், கையில்லாத ரவிக்கையும், இறுக்கமான உடலைக் கவ்வும் உடைகளும்..... திரையில் காண்பதையெல்லாம் சொல்லவே கூசுகிறது! திரைப் படங்களின் மூலமாக இந்த 'நாகரிகம்' கல்லூரி மாணவிகளிடையேயும் பரவி வருகிறது—உடையைப் பொறுத்த மட்டில். மாணவிகளைக் குறை கூறுவதற்கில்லை. அவர்களும் படம் பார்க்கிறார்கள், பத்திரிகை பார்க்கிறார்கள் — பாலுணர்ச்சியைத் தூண்டும் வகையில் கதைகளுக்குச் சித்திரம் தீட்டுகிறார்களே இன்று — இந்த நிலை முன்பு இருந்ததா? திரைப்படங்களும் பத்திரிகைகளும் மாணவ — மாணவியரின் நடை, உடை பாவனைகளை உருவாக்குகின்றன என்பதை மறுப்பதற்கில்லை. இந்த நிலையில் ஆண்— பெண் இரு பாலாரும் ஒரே கல்விக் கூடத்தில் பயில்வது நற்பலன் விளைவிக்காது; மாறாக விபரீத பலனையே அளிக்கும்! சூழ்நிலைக் கேற்பத்தானே மாணவர்களும் நடந்து கொள்ளுவார்கள். போதிய

உலகானுபவம் பெருத இளம் வயது வாலிபர்களும் யுவதிகளும் ஆண்டுக் கணக்கில் நெருங்கிப் பழகினால் விபரீதம் விளையாது என்று கூறமுடியுமா? பருவ உணர்ச்சிகளைத் தூண்டும் சூழ்நிலை; அறிவும், சிந்திக்கும் ஆற்றலும் அனுபவமும் முதிராத பருவம்—கூட்டுக் கல்விக்கு உகந்ததா இது?'' என்று கேட்கிறார் பேராசிரியர் ஸ்ரீநிவாசன்.

''இவையெல்லாம் மாணவ—மாணவியரை மட்டும் பாதிக்கக் கூடியவை யல்லவே? சமூகத்துக்கே பொதுவானதுதானே?''

''சமூகத்தில் மற்றவர்களைவிட மாணவ—மாணவியரே இந்தப் போக்கினால் மிகுதியாகப் பாதிக்கப்படுகின்றனர். படிப்பில் முழுவதும் கவனம் செலுத்த வேண்டிய வயதில் இனக் கவர்ச்சிக்கு உள்ளாகி இவர்களின் கவனம் திசை திரும்புவது வரவேற்கத் தக்கதன்று. சாந்திநிகேதன் மாதிரி நகர வாடையே இல்லாமல், நகரத்திலிருந்து இருபது, முப்பது மைல்கள் தொலைவில் கல்விக் கூடங்கள் இருப்பது நல்லதென்று கருதுகிறேன்.''

''கூட்டுக் கல்வியைப் பொறுத்த மட்டில் மாணவர்களால் மாணவியர்களுக்கு இடைஞ்சலா? அல்லது மாணவியரால் மாணவர்களுக்குத் தொந்தரவா?''

''அப்படிச் சுலபமாக வரையறுத்துக் கூற முடியாது. இனக் கவர்ச்சியைப் பொறுத்த வரை, பருவத்தின் கோளாறு காரணமாக இரு பாலாருக்குமே கஷ்டம்தான். பொதுவாகப் பார்க்குமிடத்து, ஆண்களைவிடப் பெண்கள் படிப்பில் அதிகக் கவனம் செலுத்துகிறார்கள். பணிவு, ஆசிரியர்களிடம் மரியாதை, கட்டுப்பாடு இவைகள் ஆண்களைவிடப் பெண்களிடமே மிகுந்துள்ளன என்பதை யாரும் மறுப்பதற்கில்லை. சவடாலாகப் பேசுவது, ஆசிரியர்களைக் கிண்டல் செய்வது இதெல்லாம் மாணவியர் உலகில் அபூர்வம். ஆணும் பெண்ணும் சேர்ந்து பயிலுமிடங்களில், அருகில் பெண்கள் இருப்பதால் மாணவன் ஆசிரியரிடம் குறும்பு செய்து அல்லது எதிர்வாதம் செய்து தான் 'ஹீரோ' ஆக விரும்புவது சகஜம். ஒரு மாணவரிடம் ''நீ ஏன் தாடி வளர்க்கிறாய்?'' என்று ஒரு சமயம் கேட்டேன். அவர் தாடி வளர்த்த விதமே புது மாதிரியாக இருந்தது. எனவே யதார்த்தமாகக் கேட்டேன். அதற்கு அந்த மாணவர், 'இதற்கு என்ன சோறு போட வேண்டும்? தானே வளர்கிறது!' என்றார் கேலியாக. பெண்கள் கல்லூரியில் ஆசிரியையிடம் எந்த மாணவியும் இப்படிக் கேட்க மாட்டாள் என்று நிச்சயமாகக் கூறுவேன். பழைய தலைமுறை மாணவர்களும் இப்படிக் குத்தலாகப் பேசியிருப்பார்களா என்பதை உங்கள் ஊகத்துக்கே விட்டு விடுகிறேன்.

''பட்டப் படிப்பு முடிந்து அதற்கு மேல் எம். ஏ., எம். எஸ்ஸி. போன்ற உயர் கல்வி பயிலும்போது ஆண், பெண் இரு பாலாரும் சேர்ந்து பயில்வதை ஓரளவு ஒப்புக்கொள்ளலாம். அப்போது அவர்களுக்கு இருபது வயது ஆகிவிடும். உலகம் தெரிந்தவர்களாக அவர்களைக் கருதலாம். அதற்குக் குறைந்த பருவத்தில் கூட்டுக் கல்வி விபரீதம் வேண்டாம். பார்க்கப் போனால் மாணவர்களே இதனை வரவேற்கவில்லை என்றே நம்புகிறேன். கூட்டுக் கல்வி பற்றிய ஒரு விவாதத்தில் பங்கெடுத்துக் கொண்ட ஒரு மாணவர் கூட்டுக் கல்வி முறையை எதிர்த்துப் பேசுகையில், 'வீட்டுக்குப் போய்ப் புத்தகத்தைப் பிரித்தால், ஒவ்வொரு பக்கத்திலும் உடன் படிக்கும் அழகிகளின் முகத்தைத்தான் காண முடியும்!' என்று குறிப்பிட்டார்.

''ஆகவே, எந்த விதமாகப் பார்த்தாலும் கூட்டுக் கல்வி முறை உகந்ததன்று'' எனத் திட்ட வட்டமாகக் கூறுகிறார் பேராசிரியர் திரு ஏ. ஸ்ரீநிவாசன்.

—பாணன்

(அடுத்த இதழில் மாநிலக் கல்லூரி மாணவி குமாரி சுதா இதற்குப் பதிலளிக்கிறார்)

## டக்லோக் — துக்லக் — டுக்லக் — தக்லக்



சோவின் சமீபத்திய தயாரிப்பான முகம்மது பின் துக்ளக் தங்கள் சபாவில் நடப்பதாக 15-3-68 ஹிந்து நாளிதழில் விளம்பரம் கொடுத்த நாலு சபாக்காரர்களும் நாலு விதமாக அதனை எழுதியுள்ளனர் :

Mahamad - Bin - Tuglok
Mohamed - Bin - Thuklak
Mohammed - Bin - Tuklak
Mohamed - Bin - Thugluk

இவற்றைத் ''துக்ளக் விளம்பரங்கள்'' என வர்ணித்தால் என்ன?

தகவல்: கீதா

# பொன்னிவனத்துப் பூங்குயில்

கொத்தமங்கலம் சுப்பு



**அத்தியாயம் 14**

## "நாணயமான இளவரசர்"

"**க**ல்லும் முள்ளும் நிறைந்த காடுதான் அரண்மனை. குரோதம் முதலிய குணங்கள் அரச பதவிக்குக் குழி பறித்துக் கொண்டே உன்னைச் சுற்றி இருக்கும்.

"இருள் எப்போதும் உன்னைச் சுற்றி இருக்கிறது. விழித்திரு. ஒளி மிகுந்த வீரர்கள் இடையிலே தூங்கு. நீ வீரனாக விளங்கு" என்றல்லவா கூறி அனுப்பியிருக்கிறாள்! இது தன் மகனுக்கு மட்டும் சொல்லியதல்ல. எனக்கும் என் மனைவி சொல்லி அனுப்பியிருக்கிறாள் என்று அரசர் வியந்தபோது அவருடைய அன்பு விழிகளில் ஆனந்தக் கண்ணீர் கசிந்தது. அவருடைய நாத்தழுதழுத்தது.

இதைக் கண்டு மைந்தரின் மனம் மருகியது.

''அப்பா! ஏன் கவலைப்படுகிறீர்கள்?'' என்று தந்தையை அணைத்துக்கொண்டு ஆறுதல் சொல்ல அவர் நாக்குத் துடிதுடித்தது. ''பிதாஜி!'' என்று அழைக்கவும் ஆரம்பித்து விட்டார். அந்த வார்த்தைகள் வெளியே வரும் முன்பே தம் நாக்கைக் கடித்துக் கொண்டு, ''மகாராஜ்! ஒன்றும் அறியாத எங்களைக் கொல்வதற்கு ஒருவன் முற்படுவானேயானால் அவன் எங்கள் எதிரி அல்ல. தங்களுக்கே விரோதி என்பதை நான் உணர்கிறேன். அவனை அடியோடு வேரறுக்க என்னால் ஆன முயற்சிகளை யெல்லாம் செய்வேன். இதற்காகத் தாங்கள் வருந்துவது சரியல்ல'' என்றார்.

மைந்தரின் சாதுரியத்தில் மன்னர் தம்மை மறந்தார். ''பிரதாபா! உன்னை நான் ஒரு முக்கியமான அலுவலுக்காகத்தான் அழைத்தேன். அதற்காகவே சென்ற இரண்டு நாட்களாக நான் காவிரித் தாயைக் காணச் சென்றிருந்தேன். ஆனால் இதனிடையில் 'முல்லை வேந்தனை' முதலில் கவனிக்க வேண்டும் என்று கடவுளின் கட்டளை போலும்'' என்று மேற்கொண்டு அவர் ஏதோ சொல்லப் போகும்போது, மகாராஜாவின் ராயசம் ஒருவர் கதவின் ஓரமாக வந்து நின்றார்.

''என்ன? வந்து விட்டாரா?'' என்றார் அரசர்.

''ஆம், பிரபு! காக்க வைத்திருக்கிறேன்'' என்று வணங்கினார் ராயசம். பிரதாப சிம்மரிடம், ''இரு. இதோ வருகிறேன்'' என்று உரைத்து விட்டு அரசர் அடுத்த அறைக்குச் சென்றார். அங்கு நாம் முன்பு கண்ட ஓவியர் ரங்கமன்னார் அரசரை வணங்கினார்.

அவரைத் தக்க ஆசனத்தில் அமரச் செய்து அரசர் பின்வருமாறு கட்டளை யிட்டார்: ''ஓவியர் அவர்களே!... பிரதாப சிம்மரின் சித்



திரத்தை நீங்கள் வரைந்து தர வேண்டும். அதை ஓர் முக்கியமான இடத்துக்கு அனுப்ப எண்ணியுள்ளேன்.''

''மகாராஜா! தங்கள் ஆணையைச் சிரமேற் கொள்ளுகிறேன். இளவரசரை ஓவியம் வரைய எனக்குக் கொடுத்து வைத்திருக்க வேண்டும்!'' என்றார் ஓவியர்.

''நீங்கள் குறிப்பிடும் நேரங்களில் அவர் உங்கள்சித்திரசாலைக்கு வருவார்.''

''அந்தச் சிரமம் இளவரசருக்கு வேண்டாம். இந்த அடிமையை எப்பொழுது வரவேண்டும் என்று சொன்னால் நானே வந்து பார்த்து வரைந்து விடுகிறேன்!''

''பிரதாபசிம்மர் அந்த மரியாதையையெல்லாம் பார்ப்பவர் அல்ல. அவரை எப்போது உங்களுடைய சித்திரசாலைக்கு வரச் சொன்னாலும் வருவார். இது ரகசியம்'' என்று அரசர் கூறியதும் விடைபெற்றுக் கொண்டு புறப்படத் தயாரானார் ரங்கமன்னார்.

''ஓவியர் அவர்களே! சற்று இருங்கள்!'' என்று மகாராஜா கூறிவிட்டுத் திரும்பினார். தம்முடைய ராயசத்தின் பக்கம் கண்களைக் காட்டினார். உடனே ராயசம் உட்சென்று ஒரு வெள்ளித் தட்டு நிறைய தங்க வராகன்களைக் கொண்டு வந்தார். அவற்றை அரசர் தம் வலக் கரத்தால் அள்ளி ரங்கமன்னார் கைகளில் வழங்கும்போது, ''பிரதாப சிம்மர் நாணயமான இளவரசர்'' என்று சொல்லி இட்டார். ரங்கமன்னார் அந்த வராகன்களைக் கண்களில் ஒற்றிக் கொண்டவுடனே பிரமித்தார்.

''உத்தரவு. இவைகளைப் பார்த்தே எழுதுகிறேன்'' என்றார்.

ஆம். அரசர் வழங்கிய வராகன்களில் பிரதாப சிம்மரின் திருவுருவம் பொறிக்கப்பட்டிருந்தது.

'வழக்கமாக' என்பதில் ஒரு 'ம' குறைந்தாலும் வழக்காக மாறிவிடுகிறது. வழக்கத்தின் வலிமை அத்தகையது. ஓவியருக்கு அரசர் விடை கொடுத்து அனுப்பிய மறு கணமே அரண்மனை வழக்கம் அவர் வாழ்வில் குறுக்கிட்டது. ''மஞ்சன நீராட



மன்னர்பிரான் எழுந்தருள்கின்றார் எச்சரிக்கை'' என்றனர் கட்டியக்காரர்கள். அரசர் தம் மகனை மறுபடியும் பாராமல் அங்கிருந்தே நீராடப் புறப்பட்டார்.

மஞ்சன மாளிகையிலே இரண்டு வெள்ளிக் கொப்பரைகளில் பன்னீரை இள வெந்நீருடன் கலந்து தயாராக வைத்திருந்தார்கள், இரண்டு பணிப் பெண்கள். அரசர் அங்கிருந்த பொன் முக்காலியின் மீது அமர்ந்தார். தங்கத்தால் செய்யப்பட்ட வாழைப்பூப் போன்ற செம்பில் பன்னீரை எடுத்துப் பணிப் பெண்கள் அரசர் கரத்தில் கொடுத்தார்கள். அரசர் திருமஞ்சனம் ஆடினார். ஆடி முடிந்தவுடனே பணிப் பெண்கள் தயாராக வைத்திருந்த காவிரி நீரை அவரது வலது உள்ளங் கையில் வார்த்தார்கள். அரசர் சிறிது நீரை உட்கொண்டு, 'ராம்' என்று கூறினார். எத்தனைதான் பன்னீரிலே குளித்தாலும் அது நன்னீரைப் போல் ஆகுமா? பணிப்பெண் அழகிய ஆணி முத்து மாலை ஒன்றை அரசர் கழுத்தில் அணிவித்தாள். 108 தரளங்கள் கொண்ட அந்த மாலை அவர் ஜபம் செய்வதற்காக ஏற்பட்டது. அன்று ஆடி வெள்ளிக்கிழமை. ஆனந்தவல்லி கோயிலுக்கு அரசர் விஜயம் செய்யும் நாள். அதற்காக ஏட்டில் எழுதி வைத்துள்ளபடி அவர் அன்றைக்கு அணிய வேண்டிய அணிகளையும், உடுத்த வேண்டிய ஆடைகளையும் எடுத்து வைத்துக் கொண்டு பல பணியாட்கள் ''பீதாம்பர மகாலில்'' தயாராக நின்றனர். பிரதாப சிம்மருக்கு மனத்தில் கொஞ்சம் கர்வம் உண்டு. ''தன் தந்தை யாருக்கும் கட்டுப்பட மாட்டார்'' என்று எண்ணியிருந்தார் அவர். ஆனால் அன்றைக்குத்தான் தெரிந்தது ''அரசரைப் போல கட்டுப்பட்டவர்கள் யாரும் இல்லை'' என்று. அரசர் அங்கு வந்த உடனே அவரது வலது திருவடிக்கு மேலே கணுக்காலில் ஆடகப் பொன்னாலாகிய வீரகண்டாமணியை ஒருவர் பூட்டினார். மஞ்சள் நிறப் பீதாம்பரத்தைப் பஞ்சகச்சம் வைத்துக் கட்டினார் ஒருவர். அழகான இடைக் கச்சையைக் கட்டினார் ஒருவர். அந்த இடைக் கச்சையிலே தங்கத்தால் செய்து யாளி முகப்பில் அருமையான காசிக் கமலங்களும், மாணிக்கங்களும் வைத்து இழைத்த குத்துவாள் ஒன்றைக் கட்டினார் ஒருவர். இடது புறத்தில் வீரவாளைப் பொற் சரட்டில் கோத்துக் கட்டினார் ஒருவர்.

''ஒரு கட்டா, இரண்டு கட்டா! அரண்மனையில் கட்டுகள் அதிகமா? அரசருக்குக் கட்டுகள் அதிகமா?'' என்று எண்ணியபோது, பிரதாப சிம்மருக்கு அடக்க முடியாத சிரிப்பு வந்து விட்டது. உடனே ஓர் ஓரத்தில் நகர்ந்து கொண்டார். ''சிம்மாசனத்தின் முன் சிரிக்கக்கூட முடியவில்லையே! இஷ்டத்துக்கு உடை உடுத்தக்கூட முடியாது போலிருக்கிறதே. ஏட்டுப்படி அல்லவா கட்டிக் கொள்கிறார்? நமக்கு இது கட்டவே கட்டாது. சாதாரண மனிதனுக்கு உள்ள சுதந்திரம் கூட மன்னருக்கு இல்லையே. அன்று அந்த வீதியில் திரிந்த பெண் எவ்வளவு சுதந்திரத்தோடு இருந்தாள்? அவள் நடையிலே எத்தனை மிடுக்கு இருந்தது? ''ஏனையா வண்டியை நீயா இழுக்கறே? குதிரையில்லே இழுக்குது'' என்று வண்டியோட்டியின் மீது எகிறியபோது ராஜாளி போல அன்றோ பாய்ந்தாள். அவள் கடித்த சோளக் கதிரில்தான் என்ன மணம் வீசியது! அது சோளத்தின் மணம் அல்ல. சுதந்திரத்தின் மணம். ஏழு வீணைகளையும் வாசித்த போது நன்றாய்த்தான் இருந்தது... ஆனால் அவளுடைய 'ஏய் ஏய்' என்ற குரல் இதற்கும் மேல் இனித்ததே! என்ன பார்வை! அந்தக் கண் பார்வையில் சிப்பாயே கலங்கி விட்டானே! அதிலே களங்கமில்லை. அவன் கலங்கினான். சிரித்தால் கருமை, சினந்தால் சிவப்பு! இரு விழிகளில்தான் எத்தனை ஒளி! இருந்தால் அவளைப் போல் சுதந்திரமாய் இருத்தல் வேண்டும்'' என்று இளவரசர் நினைத்துக் கொண்டிருக்கும் போது யாரோ பின்புறமிருந்து அவரைத் தொட்டார்கள். அவர் திடுக்கிட்டுத் திரும்பினார். ''அடே, சர்க்கரையா?'' என்றார். ''ஆமாம் பாலே'' என்றான் சர்க்கரை. ''பாலும் சர்க்கரையும் கலந்தால்தான் ருசி. பண்டித முனிவர் நம்மைப் பிரித்து விட்டாரே'' என்றார் இளவரசர். சர்க்கரை அவருடைய நட்பில் மயங்கி, ''அப்படியானால் என்னை நினைத்துக் கொண்டுதான் இவ்வளவு ஆழ்ந்த சிந்தனையில் இருந்தீர்களா?'' என்று நன்றியுடன் கேட்டான்.

இளவரசர் முகத்தில் புன்னகை அரும்பியது. ஆயினும் பொய் சொல்லுவாரா? ''ஏய், ஏய்!'' என்றார். ''ஓகோ!'' என்று சிரித்துக் கொண்டான் சர்க்கரை. கூண்டில் அடைபட்ட குயிலி தூண்டிலில் சிக்கிய மீன்போல் துடித்தாள் என்பதை இவர்கள் அறிவார்களா? அரண்மனையில் சர்க்கரை காவலில் வைக்கப்பட்ட அதே நேரத்தில் தான் குயிலியும் வீட்டில் அடைக்கப்பட்டாள். பூட்டி வைத்து விட்டுக் கோயிலுக்குப் போவதாகச் சொல்லிய மாமன் கோயிலுக்கா போனான்?

# சிந்தால் சோப் விசேஷச் சலுகை!

## 15 பைசா மிச்சப்படுத்துங்கள்.

உங்கள் மனத்திற்குகந்த சிந்தால் சோப்பை நீங்கள் இப்போது 15 பைசா குறைந்த விலையில் பெற முடியும். நீங்கள் செய்ய வேண்டியது இதுதான்: புள்ளிக் கோடு வழியே இக் கூப்பனைக் கத்தரித்து, உங்கள் கடைக்காரரிடம் கொடுங்கள். மறவாமல் அடுத்துவரும் சிந்தால் விளம்பரங்களிலும் இக் கூப்பன் வருவதைக் கவனித்து உபயோகியுங்கள்.

ஜி-11 (ஹெக்ஸாக்ளோரபீன்) சேர்ந்த சிந்தால் சோப் கிருமிநாசினி மட்டுமல்ல; உடம்பிலுள்ள துர்நாற்றத்தையும் அகற்றுகிறது!

INTERPUB/CS/172 TAM

## 15 பைசா மிச்சம்!




சிந்தால் கூப்பன்

இதை உங்கள் கடைக்காரரிடம் கொடுங்கள்.

திரு/திருமதி குமாரி ..............................

விலாசம் ..............................

நான் வழக்கமாக உபயோகிப்பது .................... டாய்லெட் சோப்.

K MS











LIPTON'S
FINEST
GOLDEN DUST TEA






LIPTON

# அத்தியாயம் 15

## "பனைமரக் குருக்கள்!"

தஞ்சையில் ஊரின் புறத்தே சாலையோரத்தில் தென்னங்கீற்றுகளை வைத்து நிரைச்சல் ஒன்று கட்டியிருந்தது. ஆயினும் நிரைச்சலைப் பிய்த்துக் கொண்டு இரைச்சல் வந்தது. அந்த நிரைச்சலுக்கு வெளியே பல பெண்கள், அடுப்புக்களைத் தெருவிலேயே வைத்து என்னென்னமோ பலகாரங்களைச் சுட்டுக் கொண்டிருந்தார்கள். அந்தப் பலகாரங்களில் மிளகாய்தான் முக்கியமான இடத்தைப் பெற்றது. அவர்கள் எதைச் செய்தார்கள் என்பதைப் பற்றிக் கவலையில்லை. ஏனெனில் உள்ளேயிருந்து வருபவர்கள் எதைத் தின்கிறோம் என்பதே தெரியாதவர்கள். அவ்வாறு, எல்லாம் கடந்த ஒரு கூட்டம் அன்று அந்தக் கடைக்குள்ளே அமர்ந்திருந்தது. முற்றத் துறந்த இரு முதியவர்கள் தங்கள் மனத்தை ஒரு வழிப்படுத்துவதற்காக ''மாங்காப் பால் உண்டு — மலைமேல் இருப்போர்க்குத் தேங்காய்ப்பால் ஏதுக்கடி?'' என்ற சித்தர் பாடலைப் பாடிக் கொண்டு எதிரில் இருந்த ஞானப்பாலைப் பருகிக் கொண்டிருந்தார்கள். படித்த இருவர் இராமாயண ஆராய்ச்சி செய்து கொண்டிருந்தார்கள். அவர்கள் ஆராய்ச்சி செய்த விஷயம் 'இராமாயணத்தில் சொல்லப்படும் மது என்பது தேனா தென்னங்கள்ளா?' என்பதுதான்.

இவர்களுடைய சர்ச்சையில் எல்லாம் கலந்து கொள்ளாமல் இன்னொரு வாலிபன் அடி மேல் அடி வைத்து ஆகாயத்தைப் பார்த்துக் கொண்டே நடந்து கொண்டிருந்தான். அடிக்கடி பல்லைக் கடித்தான். பெருமூச்சு விட்டான். திடீரென்று கோபம் தாங்காமல் ''கூடக் கூடவா வருகிறே? உன் பல்லை ஒடச்சுடறேன் பார்'' என்று கத்தினான். அப்பொழுது அவனுக்குப் பின்னே அவன் கூடவே நையாண்டி செய்துகொண்டே நடந்து வந்த குயிலியின் மாமன் ''பஞ்ச வர்ணம்! பாத்துப் பேசு. ஏன் ஐயா என் பல்லை உடைக்கிறே'' என்றான்.

''உன்ன யாரு சொன்னாங்க? அதோ வெள்ளை தெரியறான் பாரு. அந்தப் பய என் பெஞ்சாதியோட கையாள். நான் கடைக்குப் போகிறேனா இல்லையா என்று வேவு பார்க்க என் பிறகாலேயே இவனை அனுப்பியிருக்கிறான்!

''நாலா நாள் ராத்திரி நான் ரகசியமா தலையிலே முக்காடு போட்டுக் கொண்டு ஒரு இடத்துக்குப் போனேன். அங்கேயும் இந்தப் பய என் தலைக்கு மேலே நின்னு எட்டிப் பார்த்தான். 'டேய், உன்னை இன்னிக்கு எட்டி உதைக்காம விட மாட்டேன்' '' என்று சொல்லிக்கொண்டு நின்றபடியே இடது காலால் ஆகாயத்தை உதைத்தான் பஞ்சவர்ணம். குயிலியின் மாமன் முகத்திலே ஓர் உதை விழுந்தது. ஆயினும் அதைப் பொருட்படுத்தாமல் அவன் கீழே விழுந்த பஞ்சவர்ணத்தைத் தூக்கி நிறுத்தினான்.

பஞ்சவர்ணம் பாவைக்கூத்து நடத்துபவன். அவனுக்குத் தனிப் பாடல் திரட்டு, சுவடி தலைகீழ்ப்பாடம். சுயமாகவும் பாட்டுக் கட்டுவான். காசைத் தவிர வேறு எதைப் பார்த்தாலும் அவன் கண்களுக்கு ஒன்று ஐந்தாகத் தோன்றும். அதனாலேயே பஞ்ச வர்ணம் என்ற பேர் பெற்றான். குயிலியின் மாமனுக்கு வெள்ளை வாரணம் என்று பெயர். ஆனால் அவனே முன் பாதியைப் பெயராகவும் பின் பாதியை வயிறாகவும் வைத்துக் கொண்டு விட்டான். ஊரார் அவனை வெள்ளை என்றே அழைப்பார்கள். ஆனால் அவன் தாய் மட்டும், ''வா, ரணம்!'' என்று தான் கூப்பிடுவாள். இந்தப் பிள்ளையைத் தாய் வேறு எப்படிக் கூப்பிட முடியும்?

பஞ்சவர்ணம் பணவிஷயத்தில் சில நல்ல கொள்கைகள் உடையவன். அவன் வெளியூர் பணத்தை உள்ளூருக்குக் கொண்டுவர மாட்டான். அந்த ஊர் ஓரத்திலேயே காலி செய்து விடுவான். உள்ளூரிலும் ஊரார் பணத்தைத் தன் வீட்டுக்குக் கொண்டுபோக மாட்டான். நேரே இங்கு வந்து விடுவான். அவனுக்குத் தாராள மனசு. இதைக் கண்டால் வெள்ளை விடுவானா?

''இவரு யாருன்னு நினைச்சுக்கிட்டே? இவரு இந்த உலகத்தையே ஆட்டி வைக்கிறவரு. இந்த இந்திரன், சந்திரன் இவங்க தந்திரம் எல்லாம் இவருகிட்டப் பலிக்காது. இந்த அஞ்சு விரலுக்குள்ளே அத்தனையும் அடக்கம், தெரியுமில்லே'' என்று வானத்தைப் பார்த்து ஊளையிட்டான் பஞ்சவர்ணம்.

''அள்ளி விடாதே, பஞ்சவர்ணம். இவரு யாரு தெரியுமில்லே இந்தப் பத்து விரலுக்குள்ளே பந்துவராளி பிச்சுக்கும். சும்மா முகவீணையைக் கையிலே எடுத்து விளையாடிட்டேன்னா தேவர்கள் எல்லாம் வந்து கேப்பாங்க.''

''எதை? முகவீணையையா? 'நீ வாசித்தது போதும். முகவீணையைக் கொடு'ன்னு கேப்பாங்களா?'' என்றான் பஞ்சவர்ணம்.




சாத்தான் நேரில் போக முடியாத இடங்களுக்கு மதுவை அனுப்பி வைக்கிறான்.

— யூதப் பழமொழி

வெள்ளைக்குக் கண்கள் சிவந்தன. கோபத்தில், ''நீ என்னமோ பொம்மைகளை ஆட்டி வைக்கிறேன் என்கிறாயே, பொம்பளையை உன்னாலே ஆட்டி வைக்க முடியுமா?'' என்று கேட்டான்.

''ஏய்! என்னையா இப்படிக் கேக்கறே? இவரு கையிலே கயிறு எடுத்தா பொம்பளை ஆடாது. ஓடும்! சித்ராங்கியைக் காட்டிலுமா? அந்தச் சித்ராங்கி ஐயா விரலை அசைச்சா சுத்துவா. சரி. நீ ஏதோ பொம்பளையை ஆட்டி வைச்சிருவையான்னு கேட்டியே! அது யாரு பொண்ணு, முகம் அளகா இருக்குமா?''

''முகமா, இந்தப் பூரணச் சந்திரனை அப்படியே கையிலே எடுத்து, நடுவிலே இருக்கு பாரு, களங்கம், அதை ஒரு துண்டால் தொடைச்சுட்டு பாத்தின்னா எப்படி இருக்குமோ, அதுதான் அந்தக் குட்டி மொகம்.''

''ஹோ! சந்திரமதியா?''

''அட உன் சந்திரமதி அழுதுக்கிட்டே இல்லே இருப்பா? இந்தச் சந்திரமதி சிரிச்சுக்கிட்டே இருப்பா.''

''ஹோ, அவ்வளவு நல்ல பொண்ணு? ஆளு எப்படி இருப்பா?''

''அப்படியே சர்க்கரை மிட்டாய் அச்சுலே வார்த்து நம்ம தஞ்சாவூர் தெருவிலே விக்கிறாங்க பாரு, அந்த மிட்டாயிதான் அவ.''

''அந்தக் குட்டி உடம்பு எப்படி?''

''அருமையான உடம்பு. இந்த ஒவ்வொரு நரம்பு இருக்குதில்லே. ஒரு நரம்பு வீணைத் தந்தி. ஒரு நரம்பு துந்தினா தந்தி. அழகிலே தம்பூர் மாதிரி இருப்பா. சுண்டினா 'சரிகமபத நிஸ' எட்டுச் சுரமும் கேக்கும்.''

பஞ்சவர்ணம் 'லபக்' என்று ஒரு மிளகாயை எடுத்துக் கடித்துக் கொண்டான். 'உஸ்' என்று ரசித்தான். ''கடைக்காரரே, நம்ம வித்வானுக்கு நம்ம கணக்கிலே கொடு'' என்றான். மேலும் ''குரல் எப்படி இருக்கும்?'' என்று கேட்டான்.

''அது குரலா? இந்த வானம்பாடி இல்லே, அந்தாப் பறக்குது பாரு'' என்று உயரக் கையைக் காட்டினான் வெள்ளை. அங்கே பறந்தது பழந்தின்னி வெளவால். வெளவாலுக்கும் வானம்பாடிக்கும் வித்தியாசம் தெரியவில்லை அந்த ஞானிக்கு.

இந்த இடத்திலே மதுவையும் மீறி நின்றாள் மங்கை. பஞ்சவர்ணம், மேலும் அக்கறையோடு கேட்டான்: ''யாரய்யா அது? எங்கே இருக்கா?''

''எங்க அக்கா மவ.''

''ஹோ! உங்க அக்கா மவளா, நீ மாமேன். உனக்கு முறைகாரப் பொண்ணு.''

''நான் அப்படி எங்க அக்கா மகளைக் கட்டிக்கிறதான நோக்கத்திலே இல்லே. என் நோக்கமெல்லாம் யாரோ ஒருத்தன் கையிலே அதைப் பிடிச்சுக் கொடுத்துட்டு நான் இப்படிக் கண்டியைப் பார்க்கப் போயிடலாம்னு நினைக்கிறேன்.''

''ஏன், அங்கே பனைமரம் பெரிசா இருக்குதுன்னு பார்க்கிறியா?''

''பனை கெடக்குது பஞ்சவர்ணம். இது மூளையக் கெடுக்கிற மரம்!''

''பனையைப் பழிக்காதே. அது குருவைப் பழிச்ச மாதிரி. படைப்பில் உசந்தது பனை மரம். நுங்கைச் சீவி உள்ளே பார்த்தால் பரமசிவன் கணக்கா முக்கண். அதுதான் முக்கணிங்கிறது. முப்பழமும் பாலும், சர்க்கரையும் கலந்த ஒரே விருச்சம் பனைமரம்தான். அது கற்பக விருச்சம். கற்பனை விருச்சம். அது குரு. நம்ம குருக்கள்'' என்று கூறிவிட்டுப் பாட ஆரம்பித்தான் பஞ்சவர்ணம்.

**''புலவருக்கு நிதி அளிக்கும்**
**பொன்னி நாட்டில்**
**பலர் வாழ்த்தும் பஞ்சமிநாள்**
**பூசை பண்ணி**
**பனைகளையே குருக்களெனப்**
**பகருவோம் யாம்**
**அலகின் மிக்க சாத்திரங்-கள்**
**நால் வேதங்-கள்**
**ஆகமங்-கள் புராணங்-கள்**
**அவை-கள் எல்லாம்**
**இலைகளுக்குள் இருக்கஅதன்**
**இளம் பாளைக்குள்**
**எழுத வொண்ணா மந்திர**
**மொன்றிருக்கை யாலே.**

''மாமா, இது நம்ம பாட்டில்லே. பழம் புலவர்கள் பாட்டு'' என்று முடித்தான் பஞ்சவர்ணம்.

''சபாஷ் மாப்பிள்ளை!'' என்று ஓங்கி அவன் முதுகில் தட்டினான் குயிலியின் மாமன்.

பஞ்சவர்ணமும் அவன் கூடக் குயிலியின் மாமனும் ஒருவர் தோளுக்கு ஒருவர் துணையாக நடக்க ஆரம்பித்தனர். அன்று விருந்துச் செலவு முழுவதையும் பஞ்சவர்ணமே ஏற்றுக் கொண்டதால் வெள்ளை தன் நன்றியைக் காட்ட நினைத்தான்.

(தொடரும்)



படத்தைப் பார்த்ததும் பெண்மணிகளுக்கு மூச்சு உள்ளுக்கு இழுத்துக்கொண்டே போகும்தான்! கொஞ்சம் அமைதியாக இருங்கள். ருஷ்யாவில் உள்ள வைரப் பொக்கிஷங்கள் ஏராளம். அதில் ஒன்றுதான் இது. அரசி எலிசவேடா பெட்ரோவ்னு அணிந்திருந்த புரூச். 1750ம் ஆண்டு செய்யப்பட்டது. இந்தியா, பிரேஸில் ஆகிய நாடுகளிலிருந்து வந்த வைரங்களால் ஆனது!

இதன் மதிப்பு அளவிட முடியாதது. அதைத் தெரிந்துகொண்டு நமக்கென்ன ஆக வேண்டும்!



### பெயர்ப் பொருத்தம்

''புடவைக் கடைக்குள் நுழைந்தாள் ஒரு பெண்மணி. ''பாலிஎஸ்டர் க்வீன் இருக்கிறதா?'' என்று கேட்டாள். ''சாரி ..... மேடம்'' என்று பதில் வந்தது பையனிடமிருந்து.

''ஜார்ஜெட்.....?''

''சாரி....''

''பிரிண்டட் நைலக்ஸ்?''

''சாரி...''

''டெரிலான்...?''

''சாரி...ப்ளீஸ்...''

''என்னப்பா எதைக் கேட்டாலும் சாரி...சாரி என்கிறுயே, என்ன கடை இது?'' என்றுள் அந்தப் பெண்மணி. பெயர்ப் பலகையைச் சுட்டிக் காட்டினுன். 'சாரி சென்டர்' என்று போட்டிருந்தது.

- வி. குருமூர்த்தி.




### இதயம் கறுப்பு மார்க்கெட்டில் கிடைக்கும்!

இறந்துபட்ட ஒருவரின் இதயத்தை எடுத்து இன்னொருவருக்குப் பொருத்துவது இப்போது பிரபலமாகிவிட்டதல்லவா? இது பற்றி ''நியூயார்க் டைம்ஸ்'' என்ற பத்திரிகை கூறுவது: ''1984ல் கறுப்பு மார்க்கெட்டில் இதய விற்பனை நடக்கும். முன்னுலேயே, சாகப் போகும் நோயாளியின் இதயத்தை விலை பேசி, அவருடைய உறவினர்களிடம் பணத்தைக் கொடுத்துவிடுவார்கள். நோயாளி இறந்ததும் அவருடைய இதயத்தை எடுத்து இன்னொருவருக்குக் கறுப்பு மார்க்கெட்டில் விற்க முயற்சி செய்வார்கள். யார் மிக அதிகமாகப் பணம் கொடுக்கிறுர்களோ அவருக்கு இதயம் விற்கப்படும்!''

தகவல்: சரோஜா ராமச்சந்திரன்.

# ஓநாய்க் கோட்டை

கதை: வாண்டுமாமா

சித்திரம்: விஜயா



















ஈட்டி முதலான ஆயுதங்களை தாங்கிய காட்டு மனிதர்களோ பலர். இவர்களிடமோ ஆயுதம் ஏதுமில்லை.


இருந்தும் சமாளித்தார்கள். ஆனந்தனுக்கு இது புதிய அனுபவம்.


கந்தனுக்கோ இது கைவந்த கலை! பகைவர்களைப் பந்தாடுகிறான்....!


களைப்படைந்த இவர்களைக் கயவர்கள் அடித்து வீழ்த்துகிறார்கள்.


கந்தனுக்கு நினைவு திரும்பியதும், தள்ளாடித் தடுமாறி எழுந்தான்....


கண் விழித்துப் பார்த்த கந்தன் தான் மட்டுமே தனியாகக் கிடப்பதை உணர்ந்தான்.
ஐயோ...! ஆனந்தன் எங்கே? அவர்கள் அவனைக் கடத்திக் கொண்டு போய்விட்டார்களா? ......

ஆனந்தனைக் காணாத அதிர்ச்சி கந்தனை மறுபடி மயக்கமடையச் செய்தது. அதே சமயம் அவன் மீது கனமான வலை ஒன்று வந்து விழுந்தது.


தொடரும்

# பூரித்துக் கமழும் மணம்



## வறுத்த காப்பிக்கொட்டையின் மணத்தை

அப்படியே டப்பாவில்
வசப்படுத்தித் தருவது
ப்ரூக் பாண்ட்

# பான்

## இன்ஸ்டண்ட் காப்பி



பான்—
கச்சிதமான மணங்கமழும்
காப்பியைக்
கணப்பொழுதில்
தயாரிக்கும் வழி!




தயாரிப்போர்: ப்ரூக் பாண்ட் இந்தியா லிமிடெட்

34A/3 TAM



# அல்டாப் அப்பாசாமி

குறும்பன்

"ரொம்ப நாளா எனக்கு ஒரு வீடு வாங்கணும்னு ஆசை. அப்பாசாமியின் ஆலோசனையைக் கேட்டேனே, பிழைச்சேனே! கனவிலே கூட அப்படி ஓர் ஆசைப் படாதேன்னு அடிச்சுச் சொல்லிப்புட்டான். 'கையிலே இருக்கிற காசைச் சரண்டி ஒரு வீடு வாங்குவே. அப்புறம் அதைக் கொஞ்சம் மராமத்துப் பண்ணணும்னு தோணும். அதற்குக் கடன் வாங்குவே. அந்தக் கடனை அடைக்கக் குடி வைக்கணுமே. கார்ப்பொரேஷன்காரன் வரியை உயர்த்துவான். குடியிருக்க வரவனும் அவனுக்கு ஒத்துப்பாடுவான்! அவனைக் காலிபண்ண வைக்கிறதுக்குள்ளே உன் பாடு என் பாடு ஆகிவிடும். என்னைக் கேட்டேன்னா இருக்கிற பணத்தை ஃபிக்ஸட் டிபாஸிட்டிலே போட்டு வைச்சு, வருகிற வட்டிக்கு ஒரு வீட்டை வாடகைக்கு எடுத்துக் கொள்வது தான் நல்லது' என்றான்."

"என்னிடம் என்ன சொன்னான், தெரியுமா? 'பணத்தைப் பாங்கியிலே போட்டு வைக்கிறதா? சுத்த மடையன்டா நீ! அஞ்சு பர்சண்டுக்கும் ஆறு பர்சண்டுக்கும் ஒருவன் ஆசைப்படுவானா? என்னிடம் மட்டும் உன்னிடம் இருக்கிற பணம் இருந்தால், நான் ஒரு வீட்டை வாங்கிப் போடுவேன். அதிலே இரண்டொரு குடிகளை வைச்சு, அந்த வாடகைப் பணத்தை ரிக்கரிங் டிபாஸிட்டிலே போடுவேன்! அது மட்டும் இல்லை. வாங்கின வீட்டைப் பந்தகம் வைச்சு அந்தப் பணத்துக்குப் பிளாட்டுகள் வாங்கிப் போடுவேன். அவற்றை லாபத்துக்கு வித்து அழகாக ஒரு வீடு கட்டிக்குவேன்! நாம குடியிருக்கிறதுக்கு ஒரு நல்ல வீடு, கைவீசிச் செலவழிக்க வாடகைன்னு இருப்பேன்! உருப்படாதவன் கையிலேன்னு அந்தப் பணம் போய் மாட்டிண்டிருக்குன்னான்!"

"அப்படியா-? ஆளுக்குத் தகுந்தபடி ஆலோசனை கூறுவான் போலிருக்கே!"

"ஆலோசனையா இது? ஒருத்தன் சொல்றதுக்கு மாறு சொல்லணும். தன்னைப் பிராக்ஞரைப் பிறத்தியார் நினைக்கணும்கிற எண்ணம்டா! அன்னிக்கு வாலி வதத்தைப் பத்திக் காலட்சேபம் நடந்திண்டிருந்தது. ராமன் மறைஞ்சு கொன்றதைப் பத்திப் பாகவதர் விளக்கம் கூறிக் கொண்டிருந்தார்! 'எதுக்கய்யா, இல்லாத விளக்கமெல்லாம் கூறுகிறீர்? ஆண்டவன் அருவமானவன். உருவம் எடுத்து வந்தாலும், தான் அருவப் பொருளே என்பதை உணர்த்த அப்படி மறைந்து கொன்றான் என்று சொல்லுமே!' என்று கூறிப் பாகவதரைத் திணற அடித்து விட்டான்!"

".....ஆனால் அன்று சர்மா இதே வாதத்தைக் கூறிய பொழுது 'ஓய்! உளறாதேயும். வால்மீகி நடந்தது நடந்தபடியே எழுதியிருக்கிறார். ஆண்டவனாயிருந்தாலும் மனித உருவம் எடுத்து வந்து விட்டால், அவனும் மனிதர்கள் செய்கிற தவறுகளை யெல்லாம் செய்ய வேண்டியதுதான். தெய்வமேயானாலும் தப்ப முடியாது' என்றானே!"

"இப்படிக் குதர்க்கம் பேசுகிறவனுக்குச் சரியான பாடம் கற்பிக்கணும்" என்று கூறிப் பிரிந்த குப்புவும் முத்துவும் அப்பாசாமிக் கெதிரில் ஒரு பேச்சைத் தொடங்கினார்கள்.

"என்னதான் சொல்லு, குப்பு! இங்கிலீஷ்காரன் ஆட்சி ஆட்சிதான்! அவன் ஆண்டது போல் இந்தியர்களாலே ஆள முடியாது. என்னவோ சுதந்திரம் கிடைத்துவிட்டதாகப் பெருமைப்பட்டுக் கொள்ளுகிறோமே ஒழிய, அவன் ஆட்சிக்காலத்திலே சாமான்கள் விலை இப்படித் தாறுமாறு ஏறித்தா? கட்டுக் காவல் குலைந்ததா? நாளைக்கு ஒரு மந்திரி சபை என்று கலைந்ததா? கட்சி விட்டுக் கட்சி மாறும் கோணங்கித்தனங்கள் தலையெடுத்தனவா?" என்று கேட்டான் முத்து.

"எத்தனை பேர் எத்தனை தியாகம் பண்ணிச் சுதந்திரம் கிடைச்சிருக்கு? ஒரு நிமிஷத்திலே அத்தனையும் பயன் இல்லைன்னு சொல்லிட்டியே! நமக்கு ஆண்டு பழக்கமில்லை என்பதற்காக அடிமை வாழ்வை மீண்டும் வரவேற்பதா? அப்பாசாமி, நீயே சொல்லு!" என்றான் குப்பு.

அப்பாசாமி ஒருகணம் விழித்தான். உடனே விழித்தும் கொண்டான். இரண்டு பேருமாகத் தன்னைக் காலை வாரிவிடப் பார்க்கிறார்கள் என்பதைப் புரிந்து கொண்டு, "டேய்! ரொம்ப அலட்டிக்காதீங்கடா. நீங்க எதுக்காக இந்தப் பேச்சை ஆரம்பிச்சிருக்கீங்கன்னு எனக்குத் தெரியும். 'ராமன் ஆண்டால் என்ன? ராவணன் ஆண்டால் என்ன?' என்ற பழமொழி இன்று நேற்று ஏற்பட்டதல்ல; ராமன் ஆண்ட அந்தக் காலத்திலேயே ஏற்பட்டது. இதிலிருந்து என்ன தெரிகிறது? ராம ராஜ்யமும் ராவண ராஜ்யமும் ஒன்று போலவே நடந்திருக்கிறது என்பதுதானே? இன்னிக்கும் அந்த நிலைமை மாறிவிடவில்லை. இங்கிலீஷ்காரன் எப்படி ஆண்டானோ, அப்படியேதான் இந்தியனும் ஆளுகிறான். என்னைக் கேட்டால் உலகத்திலே அவனவன் பொழைக்க வழி பார்த்துக்கறான். கும்பெனிக்காரன் காலத்திலே வியாபாரம் ஆட்சியாச்சு. இவன் காலத்திலே ஆட்சி வியாபாரமாச்சு. இந்த அப்பாசாமிக்குன்னு ஓர் அபிப்பிராயம் உண்டு. அதை யாரும் மாற்ற முடியாது!" என்றான் மீசையிலே மண் ஒட்டாதவன் போல.

ஆம். அப்பாசாமிக்கு மீசையில்லை; மண் ஒட்டவில்லை.

# ரயில் ஓடுகிறது

ரயில் பெட்டியில் கூட்டம் அதிகமாகத்தானிருந்தது. ஆயினும் எல்லோருக்கும் உட்கார இடம் கிடைத்திருந்தபோது அவன் மட்டும் நின்றுகொண்டே . வருவானேன்?

நான் நகர்ந்து அவனுக்கு இடம் தரலாமென்றாலோ, இரு மனிதமலைகளுக்கு நடுவில் ஏற்கனவே சிக்குண்டு இருக்கிறேன்; இதில் அவனுக்குப் பரிதாபத்துக்குரிய ஓர் இடத்தை என் நெஞ்சில் தருவதைவிட வேறு எதுவும் என்னால் செய்யக் கூட முடியவில்லை.

எதிரும் புதிருமாய் நான்கு நீளமான பெஞ்சுகள் கொண்ட சிறிய பெட்டி அது. வண்டி புறப்படுவதற்கு இரண்டு நிமிடங்களுக்கு முன்புதான் அவன், தன் கையில் அந்தச் சிறிய அழுக்குப் பையுடன் அவசரம் அவசரமாகப் பெட்டிக்குள் ஏறினான்.

அந்தப் பை மட்டுமா அழுக்கு? ஒட்டும் தையலும் நிறைந்திருந்த சட்டையும் முழுக்கால் சட்டையும், சற்றே வழுக்கையும் நரையும் கொண்டிருந்த வாரப்படாத தலைமுடி; பத்துப் பதினைந்து நாள் வயதுள்ள தாடி. பெட்டியில் அந்தக் கடைசி நிமிஷத்தில் ஏற முனைந்தவனை எத்தனை குரல்கள் தடுத்தன!....

"இங்கே இடமில்லை, ஏறாதே....!"

"ரிசர்வ் செஞ்சு வைச்சவன்மாதிரி பிரமாதமா ஏறுறானே.....!"

"சேச்சே! ஒரே அழுக்கு....டிக்கெட் வாங்காம, கடைசி நிமிஷத்திலே நுழைஞ்சிடலாம்னு எண்ணமா? கூப்பிடய்யா டிக்கெட் செக்கரை!"

இப்படிக் கடைசியாகக் கேட்ட குரலைக் காதில் வாங்கிக் கொண்டே அவன், இடது கையால் தனது கைப் பையையும் வண்டிக் கதவையும் அழுத்தப் பிடித்துக் கொண்டு, வண்டி வாசற்படியில் கால்களையும் அழுந்த வைத்துக் கொண்டு, வலது கையை விரித்துத் தூக்கிக் காட்டினான்.

டிக்கெட் இருந்தது அவனிடம்!



இப்படி ஒரு கட்டம் நேர்ந்தது அவனுக்கு நல்லதாகப் போயிற்று. மேலும் யாருமே பேசாத அந்த நிலையில் அவன் வண்டிக்குள் 'சட்'டென்று நுழைந்ததுமில்லாமல், கதவையும் கவனமாகச் சாத்தினான்.

வண்டி வேகமெடுத்துக் கொண்டிருந்தது. இரண்டு கைகளாலும் அந்தப் பையை மார்புற அணைத்தவனாய்ச் சன்னல் ஒன்றில் சாய்ந்தபடி நின்றிருந்தான் அவன். மற்றவர் எல்லோரும் அவனை மறந்துவிட்ட அந்த நிலையில், என் சிந்தையை மட்டும் அவன் தூண்டிக் கொண்டே இருப்பானேன்?

எழும்பூரிலிருந்து புறப்பட்ட ரயில் ஒரே ஓட்டமாய்த் தாம்பரம் வந்து, இப்போது மறுபடியும் புறப்பட்டு விட்டது.

"நீங்க எந்த ஊருக்குப் போறீங்க?"

அவனைக் கேட்டேன்.

அவன் என்னை ஆச்சரியத்தோடு பார்த்தான். அவனைத்தான் கேட்கிறேனென்று ஆச்சரியப்பட்டானோ?

"என்னையா கேட்கிறீங்க?" என்றான்.

"ஆமாம்....."

"திருச்சிக்குங்க!"

"நானும் திருச்சிக்குத்தான் போறேன். செங்கல்பட்டில் நான் கொஞ்சம் எழுந்து நிற்கிறேன். நீங்க உட்கார்ந்து வாங்க...இரவு முழுவதும் இப்படி நின்றுகொண்டே வர முடியுமா? மாறி மாறி உட்கார்ந்து வருவோம்" என்றேன்.

"பரவாயில்லீங்க.....நிற்றதுக்காவது இடம் கிடைச்சதுங்களே. அது போதும்!" என்றான் அவன்.

அடுத்த சில நிமிடங்களுக்கு வண்டியின் ஓட்டமும் சுற்றுப்புறத்தின் தூக்க மயக்கமும்தான் நினைவில் நின்றன.

எனக்கு எதிரே ஒரு பெண்மணி உட்கார்ந்து



கொண்டே தூங்கி வழிந்து கொண்டிருந்தான். அவன் கழுத்தில், அந்தக் கழுத்தே தாங்க முடியாத அளவுக்கு நகைகள் கிடந்தன; அவன் அருகில் உட்கார்ந்து தூங்கி வழிந்து கொண்டிருந்த ஐந்து வயதுப் பெண்ணின் உடம்பிலும் மினுமினுவென்று மின்னிக் கொண்டிருந்தன நகைகள்.

தூங்காத சில ஆத்மாக்களின் பேச்சுக்கள்:

''நகை நட்டைப் போட்டுக்கிட்டு இப்படி உறங்கறாங்களே..... கழுத்தை நல்லாப் போர்த்திக்கிட்டாவது தூங்கினாத் தேவலே.''

''நாம ஏதாவது சொல்லலாம்னு அப்புறம் நம்மையே சந்தேகப்பட ஆரம்பிச்சுடுவாங்க.... உலகம் அப்படி!''

''இந்த மாதிரிச் சந்தர்ப்பங்களில் நம்ம கண்ணையும் இறுகமூடிக்கிட வேண்டியதுதான்.... இல்லாட்டி முழிச்சுக்கிட்டிருந்தவன் திருடிட்டான்னு சொல்லுவாங்க....'' இப்படிச் சொன்ன உலகானுபவர் ஜன்னல்மேல் சாய்ந்து நின்று



## கு. பஞ்சாபகேசன்

கொண்டிருந்த அவனைப் பார்த்துக் கொண்டே சொன்னது என் நெஞ்சை உலுக்கி எடுத்தது. ஆனால் அவனோ இந்த வார்த்தைகளுக்கெல்லாம் கவலைப்படுவதாகவே தோன்றவில்லை.

**வ**ண்டி ஓடிக் கொண்டிருந்தது. இப்போது அவனுடைய அந்தக் கண்களைப் பார்க்கிறேன். ஒரு மனிதனுடைய மேனி முழுதும் அழுக்கடைந்திருந்தாலும், அவனுடைய இக்கண்கள் மட்டும் அழுக்கடையவில்லை. பிரகாசிக்கா விட்டாலும் ஒருவனுடைய கண்களின் இயல்பு அநேகமாக மாறுபடுவதில்லை.

ஜன்னலின் மேல் சாய்ந்து நின்று கொண்டிருந்தவனின் கண்கள் அந்த ரயில் பெட்டியையே ஒரு முறை அளாவி, அவனுடைய விரக்தியான புன்னகையில் ஐக்கியமாகி நின்றதைப் போலிருந்தது.

மகிழ்ச்சிக்குப் பின்னாலும் வேதனைக்குப் பின்னாலும் மனித உணர்வுகளில் சரித்திரம் இருப்பதுண்டு. என் மனத்தில் இப்போது எல்லையற்ற மகிழ்ச்சி நிலவுகிறது. நாளைக் காலையில், திருச்சியில் என் அருமை மனைவியுடனும் குழந்தையுடனும் இருப்பேன் நான்! அப்பப்பா! இரண்டு மாதப் பிரிவு! அலுவலக வேலை நிமித்தம் ஒரே பயணம்! ஆம். என் மகிழ்ச்சிக்குப் பின்னால் இப்படிப் பட்டதொரு உயிர்ச் சரித்திரம்.....

இதோ என்னருகில் நின்று கொண்டிருக்கிறானே, இவனுடைய இந்த ஒளிமிகுந்த—ஆனால் ஏக்கம் நிறைந்த—பார்வைக்குப் பின்னால் என்ன உயிர்ச் சரிதம் இருக்குமோ!

இதற்குள் பின்பக்கமிருந்த ஒரு பெஞ்சியிலிருந்து திடீரென்று ஒரு குழந்தையின் அழு குரல் கேட்டது.

வினாடிக்கு வினாடி அழுகையின் சத்தம் அதிகரித்தது. ரயில் பெட்டியில் மனிதக் குரல்கள் மறுபடியும் பேசுகின்றன:

''உட்கார்ந்து தூங்குவதையும் கெடுக்கிறாங்க. இந்த அழுகைச் சத்தம்!''—இப்படியும் ஒரு மனிதர்.

''நாலு அறை கொடுத்தால் தன்னால் அழுகை அடங்கும்!''—ஒழுங்குப் பிரச்னைகளைத் தீர்த்து வைப்பதில் கைதேர்ந்தவர் போலிருக்கிறது!

ஜன்னலில் சாய்ந்து நின்று கொண்டிருந்தவனின் கைகள் அவனுடைய கைப் பையைத் துழாவுகின்றதைப் பார்க்கிறேன் நான். அவன் வெளியில் எடுத்தது ஒரு பிஸ்கட் பொட்டலம்.

''சார்...!'' என்னைப் பார்த்துக் கூப்பிட்டான்.

''என்ன வேணும்?''

''இந்தப் பிஸ்கட்டை அந்தப் பக்கம் கொடுங்க, சார்! அந்தப் பச்சைப் புள்ளைக்குப் பசி போலிருக்குதுங்க....!''

''நீங்களே கொடுங்களேன்....!''

''இல்லே சார், நீங்க கொடுத்தா வாங்கிக்கிடுவாங்க....'' என்று அவன் சிரித்துக்கொண்டே சொன்னான். அந்தச் சிரிப்பில்தான் அவனது மன உணர்வின் உயிர்ச்சரிதமே அடங்கியிருக்கிறதோ?

அடுத்த சில நிமிடங்களில் அந்தக் குழந்தையின் அழுகுரல் அடங்கி விட்டது. அதற்குப் பசிதான். அது ஒன்றும் பரம இரகசியமல்ல தான்.....அவனை நான் பார்த்த

போது...... அந்தக் கனவில்தான் எத்தனை திருப்தியான உணர்வு

வண்டி ஓடிக் கொண்டிருந்தது. இப்போது செங்கல்பட்டு தாண்டிவிட்டது.

நான் என் இருப்பிடத்தை விட்டு எழுந்து கொண்டே, ''நீங்கள் உட்காருங்கள். நான் கொஞ்சம் நின்று கொண்டு வருகிறேன்'' என்றேன்.

நன்றிப் பெருக்கோடு அவன் உட்கார்ந்த மாதிரி இருந்தது. இரண்டு கைகளாலும் பையை நன்றாக அழுந்த வைத்துக் கொண்டான்.

ஜன்னலில் சாய்ந்து நின்ற நான் அப்போதுதான் அந்தப் பெட்டியைச் சுற்று முற்றும் பார்த்தேன். உலகத்துள் ஒரு சின்ன உலகமாக இருந்தது அது.

சற்று நேரத்துக்கு முன்பு அழுத குழந்தை பாதி பிஸ்கட் தன் கை விரல்களில் நழுவ, தாயின் மடியில் உறங்கிக் கொண்டிருந்தது. அந்தத் தாயோ தானும் ஒரு குழந்தையாகத் தூங்கிக் கொண்டிருந்தாள்..... ஆம், அதுவொரு பொம்மை ரயிலாகவே காட்சி அளித்துக் கொண்டிருந்தது. என் பெட்டிக்குள் என் செல்லக் கண்ணுக்காக ஒரு பொம்மை ரயில் வண்டியை — ''அப்பா! நீ வர்ற போது நிச்சயம் 'கூவயில்' வாங்கிண்டு வரணும்!'' — என்று அவன் ஆணையிட்டிருந்ததற்கேற்ப ஒரு பொம்மை ரயிலை — வாங்கிக் கொண்டு செல்லுகிறேன்.

சாவி கொடுத்தால் அது ஓடும்; சாவி தீர்ந்து விட்டால் நின்றுவிடும். அது மாதிரி இந்த ரயில் பெட்டியும் சற்றைக்கொரு தரம் விழித்துக் கொண்டு செயல்பட்டு மறுபடியும் தூங்கி விடுகிறது.

தூக்க மயக்கம் சற்றே நீங்கிய இரண்டு பேர்வழிகள் பெஞ்சியின் கடைசியில் உட்கார்ந்து கொண்டு பேசுவது என் காதில் தெளிவாக விழுகிறது:

''பாருங்கய்யா! எல்லாரும் நிம்மதியாக் கண்ணை மூடிக்கிட்டுப் பிரயாணம் பண்ணுறாங்க..... இந்த ரயில் ஒழுங்காப் போய்ச் சேர்ந்துடும்னு என்ன நிச்சயமான நினைப்பு!''

ஆம். நடுத்தர வயதையும் கடந்தவர்தான். வாழ்க்கையில் மிகவும் அநுபவப்பட்டிருப்பார் போலிருக்கிறது. இதற்கு அடுத்தவர் கொடுத்த பதில் மொழி அதைவிட அநுபவம் மெருகு ஏறியிருந்தது.

''அதானே கேக்கிறேன்!.... ரயிலை ஓட்டும் டிரைவரும் மனுசன்தானே? வீட்டில் உண்டு உறங்குகிற பேர்வழிதானே அவனும்? இந்த ரயில் பெட்டியிலே நாம குந்தற இடத்துக்குச் சொந்தம் கொண்டாடற அதே சமயத்தில், இந்த உலகத்திலேயே நம்ம இடத்துக்கு ஆட்டம் காணாமல் இருக்க வேணுமே?''

இதற்கு அந்த இன்னொருவர் சிரித்தார். ''நூற்றில் ஒரு பேச்சுங்க! இன்னும் கொஞ்ச நேரத்தில் விழுப்புரம் வந்துடுங்க. உடம்பெல்லாம் வலி எடுக்குதுங்க; தாகமாகவும் இருக்கு.... சூடா ஒரு கப் காப்பி சாப்பிடணும்!''

வாழ்க்கையில் அவருக்கு இருக்கும் 'ருசி'யைக்கண்டு நான் உள்ளூறச் சிரித்துக் கொண்டேன். உலகம் ஒரு பல்கலைக் கழகம் என்று சொல்கிறார்களென்றால், அதன் உயிர்நாடி ஒரு ரயில் பெட்டிக்குள் ஏன் இயங்கக்கூடாது என்று நான் நினைத்தேன்.

விழுப்புரத்தில் அந்த உலகம் ஒரு முறை விழித்துக் கொண்டு அமளிதுமளிப்பட்டு மறுபடியும் உறங்கத் தொடங்கியது.

வண்டி விருத்தாசலத்தை நோக்கி ஓடிக் கொண்டிருந்தது.

இப்போது நான் உட்கார்ந்து கொண்டிருந்தேன்; அவன் நின்று கொண்டிருந்தான், தன் கையில் அந்த அழுக்குப் பையை விடாமல் பிடித்துக் கொண்டும், அதைத் தன் மார்புடன் அழுத்திக் கொண்டும்.

எக்ஸ்பிரஸ் வேகமெடுத்துக் கொண்டிருந்தது. பின்னிரவின் தொடக்கமான அந்த வேளையில், தூக்கம் என்னையும் சற்றே அசத்தத் தொடங்கிய வேளையில் ''சார்.....'' என்று நின்று கொண்டிருந்த அவனுடைய குரல் கேட்டது.

'சட்'டென்று கண்களை நன்றாக விழித்துக் கொண்டு, ''என்ன வேண்டும்?'' என்றேன்.

என் காலடியைச் சுட்டிக்காட்டினான் அவன். குனிந்து பார்த்த இடத்தில் தூக்கி வாரிப் போட்டது எனக்கு.

என் பாதத்துக்குப் பக்கத்தில் ஒரு தங்கச் சங்கிலி கிடந்தது!

உடனே எதிர்ப் பெஞ்சியை நோக்கினேன். தாயும் மகளுமாக — அந்த 'ஆபரண பூஷிதைகள்' தூங்கி வழிந்து கொண்டிருந்தார்கள். அவர்கள் இருவரின் கழுத்துகளில் ஒன்றிலிருந்து அவிழ்ந்து விழுந்துவிட்டதோ, அது.......?

அவன் என்னை நோக்க, நான் அவனை நோக்க —

மேலே என்ன செய்வதென்று இருவருமே ஒருவரையொருவர் பார்வையால் வினவிக் கொண்டிருந்தோம்.

அப்போது நல்ல வேளையாக அந்த அம்மாள் — பொன்னால் தன்னை வர்ஷித்துக் கொண்டிருந்தவள் — தன் கண்ணை இலேசாக விழித்துக் கொண்டாள்.

''அம்மா!.... இது உங்களுடையதுபோல் இருக்கிறதே. நழுவி விழுந்திட்டதுபோல் இருக்கிறது!'' என்றேன், கீழே கிடந்த சங்கிலியைச் சுட்டிக் காட்டியபடி.

இப்போது தன் கண்களை நன்றாக விழித்துக் கொண்ட அந்த அம்மாள் தூக்கிவாரிப் போட்டவளாய் அந்தச் சங்கிலியைப் பார்த்த பிறகு, ''அது நம்மளது இல்லீங்க... அது யாருதோ என்னவோ? இந்த வம்பையெல்லாம் கண்ணாலேகூடப் பார்க்கப்படாதுங்க!'' என்று பேசியவளாய், அப்போதுதான் தன் புடவைத் தலைப்பை இழுத்துத் தனது கழுத்தை இறுக மூடிக் கொண்டதுமல்லாமல், அருகில் உட்கார்ந்திருந்த மகளுடைய கழுத்திலிருந்தவற்றையும் எண்ணியவளாய்த் திருப்தி அடைந்து மறுபடியும் அந்த 'உட்கார்ந்த உறக்க நிலையை'த் தொடர ஆரம்பித்தாள்.

அவன் என்னைப் பார்த்துச் சிரிக்க, நான் அவனைப் பார்த்துச் சிரிக்கக் காலடியில் கிடந்த



"உங்கள் குழந்தைக்குப் பிரத்தியேகமான பவுடர் தேவைப்படுகிறது —
கால்கேட்டே அந்த
நேர்த்தியான பவுடர்!"






கால்கேட் பேபிபவுடர் மிகவும் மென்மையானது. அதிகமாக வேர்வையை உறிஞ்சக்கூடியது. பட்டுப்போல் மிருதுவானது. அது குழந்தையின் இளம் சருமம் எரிச்சலடையாமல், நமைச்சலடையாமல் பாதுகாத்து குழந்தையை குளுமையுடன், சுகமாகவும், ஆனந்தத்துடனும் வைத்திருக்கும். உங்கள் குழந்தைக்கு இன்றே கால்கேட் பேபி பவுடரை வாங்குங்கள்!

கால்கேட் பேபி பவுடர் வாங்குங்கள்
— அதிக பவுடர்...
அதிக சிக்கனம்!

CSP.G.7 TAM

---

# ரணசிகிச்சையின்றிப் புது முறையில் வலிமயமான மூலத்தைச் சுருக்கிக் குணமளிக்கிறது. நமைச்சலை நிறுத்துகிறது வலி தணிக்கிறது.

**நியூயார்க்—தீவிரப் பிணிகளில் தவிர மற்றபடி ரண சிகிச்சையின்றியே மூலத்தைச் சுருக்கி, நமைச்சலை நிறுத்தி, வலி தணிக்கும் அற்புத வல்லமையுள்ள புதிய மருந்துப் பொருளை முதன் முறையாகக் கண்டுபிடித்துள்ளது விஞ்ஞானம்.**

டாக்டரின் கண்காணிப்பில் நிகழ்த்தப் பட்ட பரிசோதனைகளே இதற்கு அத்தாட்சி-வலியும் நமைச்சலும் உடனடியாகத் தணிக்கப் பட்டன. இதமுடன் மெல்ல வலியாற்றிய அதே சமயம், உள்ளபடி சுருக்கமும் குணமும் ஏற்பட்டது.

அனைத்திலும் அதிசயம் என்னவெனில், பத்து, இருபது ஆண்டுகள் நீடித்திருந்த பிணிகளிலும் இந்த அபிவிருத்தி நிலைபெற்றதுதான்.

உலகப் புகழ்பெற்ற ஆராய்ச்சிக் கழகம் ஒன்றின் கண்டுபிடிப்பாகிய பயோடைன் * என்ற புதிய மருந்துப் பொருளே இதன் இரகசியம், இப்புதிய மருந்துப் பொருள் தற்போது ப்ரிப்பரேஷன் ஹெச் என்ற பெயருடன், களிம்பு வடிவிலே அளிக்கப் படுகிறது. மூலத்தைச் சுருக்குவதோடு, மலப்பாதைக்கு மழமழப்பூட்டி, மலப்போக்கின் வலி அற்றதாக்குகிறது. ரணமும் நமைச்சலும் மேலும்பரவுவதைத் தடுக்கிறது. ப்ரிப்பரேஷன் ஹெச், 30 கி. மற்றும் 50 கி. ட்யூபுகளாக இடுகுழாயுடன், எல்லா உயர்தர மருந்துக் கடைகளிலும் கிடைக்கும்.

மூல நோய்பற்றி விளக்கும் சிறுநூலை இலவசமாகப்பெற இன்றே எழுதுக: டிபார்ட்மென்ட் 38. ஜெப்ரி மானேர்ஸ் & கோ. லிட்; தபால் பை 10133, பம்பாய்-1 பி.ஆர்

*டிரேட் மார்க்

23-266-TM

தங்கச் சங்கிலியும் எங்களைப் பார்த்துச் சிரித்தது.

**ஓசி வேண்டாம்!**



எக்ஸ்பிரஸ் விருத்தாசலத்தை அடைந்தது. ரயில் பெட்டி சற்றே விழித்துக் கொண்டது. கீழே கிடந்த சங்கிலியைப் பற்றிய விசாரிப்பில் கிடைத்த பலன், 'அது நம்முடையதில்லை', 'பிறத்தியார் பொருளை எங்களது என்று எப்படிச் சொல்ல வேண்டும்', 'தொட்டால்கூட திருடி விட்டோம் என்று உலகம் சொல்லும்' என்று வேதாந்தம் பேசியது அந்த ரயில் உலகம்.

இவர்களில் ஒவ்வொருவருக்கும் பொன்னின் அருமை தெரியாதா என்ன? தங்கத்தைப் பற்றிய ஏக்கம் மனத்தில் இருக்காதா என்ன? ஆனால், உலகமே சத்திய வடிவமாய் மாறிவிட்டதோ என்று நினைக்கும்படியாக அவர்கள் ஒவ்வொருவரும் அப்போது அப்படித்தான் பேசினார்கள்!

வண்டி இப்போது மறுபடியும் வேகமெடுத்துக் கொண்டிருந்தது. இப்போது மறுபடியும் இடமாற்றம். அவன் என் இடத்தில் உட்கார, நான் அவன் இடத்தில் நின்று கொண்டிருந்தேன். எங்களுக்குள் செய்து கொண்டிருந்த ஏற்பாடு ஒரு குந்தகமும் நேராமல் இதுவரையில் நிறைவேறிக் கொண்டுதான் இருந்தது.

இப்போது அவன் காலடியில் அந்தச் சங்கிலி கிடந்தது. அவன் கைகளுக்குள் அவனது அழுக்குப் பையும் இருந்தது.

அப்போது —

திடீரென்று அவனருகில் நெருக்கியடித்து உட்கார்ந்திருந்த அந்தப் பருமனான மனிதர் அதாவது என்னருகில் உட்கார்ந்து சென்னை எழும்பூரிலிருந்து எந்தச் சூழ்நிலைக்கும் அசைந்து கொடுக்காமல், கண் மூடி ஆனந்த நித்திரை செய்து கொண்டே வந்தவர் — கண்களை நன்றாக விழித்துக் கொண்டார் —

தம் சட்டைப் பையைத் தொட்டவர் திடுக்கிட்டார். அருகில் உட்கார்ந்திருந்த அவனைப் பார்த்தவுடன், அவன் கையைச் சட்டென்று பிடித்துக் கொண்டார்.

"சங்கிலியை என் பையிலிருந்து எடுத்தாயா?" என்று கேட்டார்.

அவன் தன் காலடியைச் சுட்டிக் காட்டினான். குனிந்து அவர் அதைச் 'சட்'டென்று எடுத்துக் கொண்டார்.

சத்தம் போடாமல் ஆனால் அழுத்தமான குரலில், "சத்தம் போடாமல் ஒப்புக்கொள். நீதானே அதை என் பையிலிருந்து திருடினே?" என்று கேட்டார்.

அவன் அதே விரக்தியான சிரிப்புடன் என்னைப் பார்த்தான். நான் முன் வந்து அவருக்கு விஷயத்தை விளக்கினேன். இத்தனை நேரமாய் நாங்கள் விசாரணைகள் நடத்தியும் அவர் விழித்துக் கொள்ளாமல் தூங்கிக் கொண்டிருந்ததைப் பற்றியும் அவருக்குச் சொல்லிவிட்டு, "சங்கிலியை ஏன் பைக்குள் போட்டுக்கொண்டு வருகிறீர்கள்?" என்றதொரு கேள்வியையும் அவரிடம் கேட்டு வைத்தேன்.

அதற்கு அவர் பதில் சொல்லாமல், "அரியலூர் வந்துவிட்டதா?" என்று கேட்டார்.

"வந்து கொண்டிருக்கிறது" என்றேன்.

"நல்ல வேளை. விழிப்பு வந்தது. நான் அரியலூரில் இறங்குகிறேன்" என்றுசொல்லிவிட்டு அருகில் உட்கார்ந்திருந்த அவனைப் பார்த்து, "நீங்கள் ஒன்றும் தப்பிதமாக நினைத்துக் கொள்ளாதீர்கள்" என்றார்.

அவன் சிரித்தான். அதே சிரிப்பு; பாச உணர்வுகளுடன் ஒட்டாத ஒரு வகைச் சிரிப்பு.

வண்டி அரியலூரில் நின்றது. பெஞ்சிக்கு அடியிலிருந்த ஒரே சூட்கேஸுடன் அவர் இறங்கினார். இப்போது அவனருகில் எனக்கும் இடம் கிடைத்தது. வண்டி புறப்பட்டது. ஜன்னலூடே அதிகாலைத் தென்றலுடன் இலேசான குளிர் வாடையும் வீச ஆரம்பித்தது.

"சார்.......!" — அவனே.

"என்னங்க?" என்றேன் நான்.

"தூக்கம் வருதுங்களா?"

"இதோ இன்னும் கொஞ்ச நேரத்தில் திருச்சி வந்துவிடும்; இனியும் தூக்கமா?"

"திருச்சி மட்டுமல்ல சார், இன்னும் கொஞ்ச நேரத்தில் இரவு முடிந்து, விடியற்காலமும் வந்துவிடப் போகிறதே!" என்று சொல்லி இலேசாக அதே சிரிப்பைச் சிரித்தான் அவன்.

அந்த அழுக்குப் பையை அழுத்தமாய் மூடி வைத்துக் கொண்டிருந்த அவனை மறுபடியும் ஆச்சரியத்துடன் பார்த்தேன் நான். அவன்தான் பேசினான் :

கேள்வி கேட்கத் தெரிவதே பாதி தெரிந்து கொண்டாற்போல்.

— லத்தீன் பழமொழி



---

"சார், சங்கிலியுடன் அரியலூரில் இறங்கினாரே, அவரைப்பற்றி என்ன நினைக்கிறீங்க?"

"ஏன் ?"

"அந்தப் பொருள் அவருடையதுதான்னு எப்படி நிச்சயமாய்ச் சொல்ல முடியும் ?"

அவன் சொன்னதிலும் உண்மை இருந்தது எனக்குப் புலப்பட்டது. அத்தனை நேரம் தூங்கிக் கொண்டே வந்தவர் திடீரென்று விழித்துக் கொண்டதும் அரியலூரில் அவசரம் அவசரமாக இறங்கியதும், சந்தேகத்தைக் கிளப்பின.

அந்த ஆசாமி இரவு முழுவதும் தூங்காமலே வெறுமே கண்களை மட்டும் மூடிக்கொண்டிருந்தாரோ ? திருடுவதிலும் இப்படி ஒரு விதம் இருக்குமோ ?

அவனுடைய அதே வறட்சியான சிரிப்பு மெல்லொலியில் மறுபடியும் கேட்டது : "சார், மிகவும் களைச்சிருக்கிங்க போலிருக்குது.... திருச்சி வர இன்னும் ஒரு மணி நேரமாவது ஆகும். கொஞ்சமாவது 'ரெஸ்ட்' எடுங்க, சார்......"

ஆனால் எனக்கோ அவனுக்கோ அப்புறம் ஏது உறக்கம்? திருச்சி நெருங்க நெருங்க அந்தப் பொம்மை ரயில் பெட்டியும் நிஜ ரயில் பெட்டியாக மாறத் தொடங்கியது. சலசலப்பு ஆரம்பிக்க, அவரவர் பொருள்களைச் சீர்ப்படுத்தத் தொடங்கினார்கள்.

திருச்சி டவுனில் வண்டி நின்றதும் —

வண்டி சற்றுக் காலியாகியது. தாங்கமுடியாத நகை பாரம் அணிந்திருந்த தாயும் மகளும் இறங்கினார்கள். வண்டி புறப்பட்ட போது, ஓடி வந்து பெட்டிக்குள் ஏறிக் கொண்ட ஒரு பேர்வழி, "செல்லையா, நீயா?" என்று கூவிக் கொண்டே என் அருகில் அமர்ந்திருந்த அவனிடம் வந்து, அவனை அப்படியே தழுவிக் கொண்டார்.

பொன்மலை ரயில் ஒர்க்ஷாப்பில் பணிபுரியும் ஒரு தொழிலாளி அந்தப் பேர்வழி. ஒரு கையில் டிபன் பாத்திரம் இருந்தது. காலை டியூட்டிக்காகப் போய்க் கொண்டிருந்தார் அவர்.

அவரது கண்களில் கண்ணீர்! ஆனால் என் சக பிரயாணியின் கண்களிலோ அதே பிரகாசமான விரக்தியான உணர்வு ஒளி !

"செல்லையா ! என்ன ஆச்சு ?" — அலறினார் வந்தவர்.

செல்லையா என்ற எனது சக — பிரயாணி ஒன்றுமே பேசவில்லை.

"சொல்லு, செல்லையா......!"

"...... ..........."

"தாரை வார்த்திட்டியா?"

"........... ............."

"செல்லையா !" என்று கதறிக் கொண்டே தம் நண்பனைக் கட்டிக் கொண்டார் அந்தப் பேர்வழி.

அடுத்த ரயில் நிலையமான பொன்மலையை நோக்கிச் சென்று கொண்டிருந்த வண்டியின் ஓட்டத்தில் நான் அறிந்து கொண்ட திடுக்கிடும் தகவல் —

என் சக பிரயாணி தனது நோயாளி மனைவியைச் சென்னை ஆஸ்பத்திரியில் இழந்து விட்டு வருபவர் என்பது.

"சார் ! நான் இறங்கப் போகிறேன். உங்களைப் போல் மனசு உள்ளவங்க உலகத்தில் ரொம்பக் குறைச்சல் சார். இராத்திரி முழுதும் பாதி நேரம் எனக்கு உட்கார இடம் விட்டு நீங்க கஷ்டப்பட்டு வந்தீங்க" என்று செல்லையா சொல்லிக் கொண்டே வந்த போது வண்டி பொன்மலை பிளாட்பாரத்தில் நுழைந்து கொண்டிருந்தது.

அந்த ஓரிரவுப் பிரயாணத்தில் அவனுக்குப் பாதி இடம் நான் அளித்தது ஒரு பெரிதா ? வாழ்க்கை முழுதும் அவனுடன் பகிர்ந்து கொள்ளவேண்டியவளை அவன் இழந்துவிட்டு வந்திருந்தானே!

வண்டி நின்றது. அழுக்குப் பையுடன் இறங்கத் தயாரான அவன், "சாருடைய கண்ணை இந்த அழுக்குப் பை என்னவோ செய்யுது போலிருக்குது. பெரிய பொருளை இழந்துவிட்டு வந்திருக்கிற இவன் இந்த அழுக்குப் பையை ஏன் இப்படிப் பாதுகாக்கிறான்னு மனசுக்குள்ளாற கேள்வி கேட்டுக் கிட்டே இருக்கிறது எனக்குத் தெரியுது !" என்று சொல்லிக் கொண்டே பைக்குள் கையை விட்டு ஒரு சிறு பொட்டலத்தை எடுத்துப் பிரித்தான்.

அதில் இரண்டு வளையல்கள், தோடுகள், மூக்குத்தி, ஒரு கொடி —

அவன் இல்லத்தரசி அணிந்திருந்த நகைகள் ! உள்ளம் குமைய, எனக்குக் கண்கள் கலங்கின.

"நானும் உலகத்துடன் — வாழ்க்கையுடன் — எப்படியாவது ஒட்ட வேண்டியவன் தானே சார் ? அதனால்தான் இந்த நகைகளைப் பத்திரமாக எடுத்து வர, பையை அத்தனை ஜாக்கிரதையாக என்னுடன் வைத்துக் கொண்டிருந்தேன்.... அவள் பெத்து வைச்சிருக்கிற ஒரு பெண் குஞ்சு வீட்டிலே இருக்குது சார்! வர்றேன், சார் !" என்று கூறிக் கொண்டே கைகூப்பி இறங்கினான் அவன், அது என்ன அமைதியான சிரிப்போ, அதைச் சிந்திக் கொண்டே.

திருச்சி ஜங்ஷனில் இறங்கத் தயார்ப்படுத்திக் கொண்டிருந்தவனுடைய நெஞ்சில் என் பெட்டியில் நான் ஆசையாக வாங்கி வைத்திருந்த பொம்மை ரயிலின் நினைவு வந்தது.

குழந்தைக்கு அந்தப் பொம்மை ரயில் உயிர்ச் சுவை ததும்பிய ஓர் விளையாட்டுப் பொருள்; சாவி கொடுக்கப்பட்டு அது ஓடும் போது குழந்தையின் நெஞ்சம் அடையும் உணர்ச்சிகளைப் போலவே நானும் அந்த நிஜ ரயிலிலிருந்து இறங்கியவனும், எனது உணர்ச்சிகளிலிருந்து விடுபட எத்தனித்தவனும், "போர்ட்டர், போர்ட்டர்!" என்று உரக்கக் கூவினேன்.

# ராம்தீர்த் பிரஹமி ஆயில்

(ஸ்பெஷல் நெ. 1) (ரிஜிஸ்டர்டு)



கூந்தல் உதிர்வதையும், பொடுகையும் தடுத்து கேசத்திற்கு கரு நிறத்தையும் பளபளப்பையும் அளிக்கும் ஓர் ஒப்பற்ற கூந்தல் தைலம், பல உயர்ந்த மூலிகைகளைக் கொண்டு தயாரிக்கப்பட்டது. மூளைக்குக் குளிர்ச்சியளித்து, ஞாபக சக்தியை அதிகரித்து, கண் எரிச்சலையும் அடிக்கடி ஏற்படும் தலைவலியையும் போக்கி நிம்மதியான நித்திரையை அளிக்கிறது.

## யோகாசனப் படம்

எங்கள் யோகாசனப் படத்தில் காட்டியுள்ளவாறு ஆசனங்களை முறைப்படி செய்து வந்தால் நீங்கள் உடல் வலிவு பெற்று ஆரோக்கியமாக வாழ்வீர்கள்:

விலை ரூ. 3. (தபால் செலவு உள்பட)

**SHRI RAMTIRTH YOGASHRAM**

**DADAR - BOMBAY - 14**

மதராஸ் டிப்போ: 25, நைனியப்ப நாய்க்கன் தெரு, மதராஸ் - 3

போன்: 34258

எமது சென்னை ஆபீஸில் யோகாசன வகுப்புகள் நடத்தப்படுகின்றன










# Exide

உங்கள் உள்ளூர் ஏஜெண்டு

தி ஜெனரல் எலெக்ட்ரிக் கம்பெனி

ஆப் இந்தியா பிரைவேட் லிட்,

சென்னை, கோயமுத்தூர், பெங்களூர், எர்ணாகுளம், செகந்திராபாத்.

# நண்பனின் கல்யாணத்தில்...

இருள் நீக்கி கணேசன்

ஹூப்ளி ஜங்ஷனில் புனா — பெங்களூர் மெயில் வந்து நின்றதுதான் தாமதம். ரயிலில் இடம் பிடித்துவிட வேண்டும் என்ற அவசரத்தில் அலங்கமலங்கப் பிளாட்பாரம் முழுவதுமாக ஓடும் ஜனங்களிடையே நானும் ஒருவனாகக் கடைசிப் பெட்டியில் தொற்றிக் கொண்டேன். உள்ளே நுழையவே இடமில்லை. இடக்கை கைப்பையைப் பிடித்திருக்க வலது கையால் கதவுக் கைப்பிடியைப் பிடித்துக் கொண்டு ஏறு பலகையில் ஒற்றைக் காலில் நின்றுகொண்டே பிரயாணம் செய்யும்படி நேர்ந்துவிட்டது.

சே! என்ன கூட்டம்? முன்னமேயே தெரிந்திருந்தால் ரிசர்வேஷனாவது செய்திருக்கலாம். ஆனால் தெரியாமல் என்ன? என்னுடைய நண்பனின் திருமணத்துக்கு பெங்களூர் போக வேண்டுமென்று முன்பே எண்ணம் இருந்தும் கூடக் கிளம்பும் வரையில் நிச்சயம் செய்ய முடியவில்லை. ஆபீஸில் லீவு கிடைக்காதது தான் காரணம்.

ரயில் நகர நகரக் கூட்டம் கலகலத்துப் போய்ச் சிறிது சிறிதாகப் பெட்டியுள்ளே சென்று நின்றுகொள்ள இடம் கிடைத்தது. நான்கைந்து ஸ்டேஷன்கள் வந்து போன பின் ஜன்னல் ஓரமாக உட்கார்ந்துகொள்ளக் கொஞ்சம் இடம் கிடைத்தது. 'அப்பாடா' என்று உட்கார்ந்து சிறிது ஆசுவாசப்படுத்திக் கொண்டேன். ஜன்னல் வழியே இதமாகக் குளிர் காற்று வீசிக் கொண்டிருந்தது. பெட்டியின் உள்ளே ஒரு நோட்டம் விட்டேன். ஒரு பெரியவர் தூக்கத்தில் சாமியாட்டம் ஆட, ஒரு நாகரிக உடைக்காரர் பெர்ரி மேசனின் நாவலில் மூழ்கியிருக்க, ஒரு குஜராத்தித் தம்பதி சப்பாத்தியை ருசித்துக் கொண்டிருக்க, ஒரு நாகரிக மங்கை ஒன்றும் செய்யாமல் சும்மா நகத்தைக் கடித்துக் கொண்டு என்னையே பார்த்துக் கொண்டிருந்தாற்போல் தோன்றியது. அவளிடமிருந்து பார்வையை வெட்டித் திருப்பி ஜன்னல் வழியே வெளியில் நோக்கினேன். வெளியில் 'கருகும்' என்று ஒரே இருட்டு! அவ்வப்பொழுது சில விநாடிகளுக்கொரு முறை தூரத்தில் சில விளக்குகள் மின்னிக் கொண்டிருந்தன.

அப்படித்தான் என் இருண்ட மனத்திலும் பளிச் பளிச்சென்று சில நினைவுகள் வந்து மறைந்து கொண்டிருந்தன. கன்யாவைப் பற்றிய அடிக்கடி நினைவலைகள் எழுந்து கொண்டிருக்க, என் மனம் இரண்டு வருடங்கள் பின்னோக்கிச் சென்று பழைய நிகழ்ச்சிகளை அசைபோடத் தொடங்கியது.

கல்லூரி வாழ்க்கை சந்தேகமில்லாமல் ஒரு பொன்னான வாழ்க்கைதான். எதைப் பற்றியுமே தீவிரமாகச் சிந்திக்காமல், இலேசான வாழ்க்கையை இன்பகரமாக ஆக்கிக் கொண்டு ஒரு விநோதமான உலகத்தில் வாழும் காலம் அது.

எங்கள் கல்லூரி ஒரு பெரிய குன்றின் மேல் இருந்தது. சுற்றிலும் ஐந்துக்கும் மேலான சிறு சிறு குன்றுகளின் மேல் ஹாஸ்டல்கள், ஆசிரியர்கள் குடியிருப்பு, பியூன்களின் குடியிருப்பு என்று வரிசை வரிசையாகச் சின்னதும் பெரியதுமான கட்டிடங்கள்.

பச்சை நிறப் பின்னணியில் சிவப்பு ஓடு வேய்ந்த அந்த வெள்ளை நிறக் கட்டிடங்களைக் கண்டாலே மனம் நிறைந்து விடும். கட்டிடங்களைத் தவிர, எங்கு நோக்கினும் வானுற உயர்ந்த மரங்கள், பச்சைப் புற்கள், பசுமை...பசுமை... பசுமை... எங்கும் பசுமைதான். வடமேற்கு மூலையில் உள்ள சிறு குன்றிலிருந்து சலசலவென்று விழுந்து ஓடும் அருவியைப் பார்த்தால் ஒரு கன்னி சிறிதே வெட்கத்துடன் தன் காதலனுடைய மடியிலிருந்து தாவித் துள்ளிக் குதித்து ஓடுவது போன்ற ஒரு பிரமை.

அந்த அருவி ஓடையின் கரையில்தான் நான் முதன் முதலாகக் கன்யாவைச் சந்தித்தேன்.

பச்சைப் புல் மெத்தையின் மேல் மல்லாந்து படுத்து, சூழ்நிலையை மறந்து நானே இயற்றிய கவிதை ஒன்றை ஏதோ ஒரு ராகத்தில் பாடிக் கொண்டிருந்தேன். பக்கத்தில் அரவம் கேட்கவே, சட்டென்று எழுந்து உட்கார்ந்தேன்.

''வெரி பிரமாதம் மிஸ்டர். என்ன அருமையாக இருக்கிறது உங்கள் குரல்'' என்று சிறிது வெட்கத்துடன் அதேசமயம் பாராட்ட வேண்டும் என்ற தொனியில் 'மென் மென்' என்று வளையல் குலுங்கக் கைதட்டிக் கொண்டே அருகில் வந்தாள் ஓர் அழகி.

எனக்குச் சட்டென்று வெட்கமாகி, நாக் குழற, ''நீங்...நீங்கள்... யூ...யூ...'' என்று திக்கினேன்.

''நான்தான் கன்யா. சுமார் பத்து நிமிடங்களுக்கும் மேலாக அந்த மாமரத்தின் பின்பக்கம் ஒளிந்திருந்து உங்கள் பாட்டை — அது தமிழில் இருந்தபோதிலும் ரசித்துக் கொண்டிருந்தேன். தவறுயிருந்தால்...'' — ஆங்கிலத்தில் மொழிந்தாள். உருவம் மாத்திரமல்ல. அவள் குரலும்கூட அழகுதான்.

''ஓஹ் ...ஓஹ்! தவறு ஒன்றுமில்லை... நெவர்மைண்ட்...'' என்ற எனக்கு மேலே என்ன பேச வேண்டும் என்றே புரியவில்லை. அவளுடைய அழகு அப்படி ஒரு மயக்கத்தைத் தந்துவிட்டது. பிறகுதான் ஞாபகம் வந்தது. அவளுடைய பாராட்டுக்கு ஒரு நன்றி கூறவேண்டும் என்று.

''தாங்க்ஸ் ஃபார் யுவர் காம்ப்ளிமெண்ட்ஸ்'' என்றேன்.

''இருக்கட்டும். ஆனால் நீங்கள்தான் என்னை மன்னிக்க வேண்டும். உங்கள் தனிமையை...''— என்று குழைந்தவளை—

''ஒன்றுமில்லை. பொழுது போகவில்லை. ஜஸ்ட் லேசிங்...'' என்று இடைமறித்தேன்.

''இருக்கட்டும். இவ்வளவு அருமையாகப் பாடுகிறீர்களே மிஸ்டர்...''

''என் பெயர் ராஜன்.''

## ஆம்! சந்தேகமே இல்லை என் நண்பனின் மனைவி ஸ்தானத்தில் என் காதலி கன்யாவேதான்!



''மிஸ்டர் ராஜன்! ஒன்று கேட்பேன். தப்பாக நினைக்க மாட்டீர்களே? இன்னொரு பாட்டு...'' என்று கெஞ்சினாள்.

''மன்னிக்க வேண்டும். எனக்கொன்றும் அதிகமாகத் தெரியாது..'' என்று இழுத்தேன் நான்.

''ராஜன்! நீங்கள் பாடித்தான் ஆக வேண்டும்'' — மிஸ்டர் என்ற கூப்பாடெல்லாம் போய் ஓர் உரிமை கலந்த உத்தரவாகவே வந்தது அவள் வாயிலிருந்து. அது மட்டுமல்ல. நான் பாடாவிட்டால் சத்தியாக்கிரகம் செய்யப் போவது போல் உறுதியாக உட்கார்ந்தும் விட்டாள்.

ஓர் அழகுத் தேவதை எதிரில் உட்கார்ந்து கொண்டு கேட்கும்போது எப்படி மறுக்க முடியும்?

பாடினேன். ஓர் அரை மணி நேரம் பாடியிருப்பேன். எதிரில் உட்கார்ந்திருந்த கன்யாவின் கண்களில் கண்ணீரைக் கண்டவுடன் சட்டென்று பாட்டை நிறுத்திவிட்டு எழுந்து மண்டியிட்டுக் கொண்டு ஏதோ ஒரு துணிச்சலில் அவள் தோளைத் தொட்டு ''என்ன இது மிஸ்....அழுகிறீர்களே?'' என்றேன். அவள் உணர்ச்சிவசப்பட்டு என்னை அணைத்துக் கொண்டு, ''ஆனந்த பாஷ்பம்'' என்றாள் தேம்பிக் கொண்டே.

பிறகு தன் செய்கைக்கு வெட்கப்பட்டவள்போல் சடக்கென்று பின்னால் நகர்ந்து அமைதியில்லாமல் அமர்ந்து கொண்டாள்.

பிறகுதான் ஒருவரைப் பற்றி ஒருவர் விசாரித்துக் கொண்டோம். அவள் என்னுடைய பேராசிரியர் ஒருவரின் புதல்வி. பி.யு.சி.யுடன் படிப்பை நிறுத்திக் கொண்டவள். பூர்வீகத்தில் தமிழ்க் குடும்பமாக இருந்தும் கன்யாவுக்குத் தமிழ் அவ்வளவாகத் தெரியாதாம். பேராசிரியர் இயற்கையை ரசிக்கத் தெரியாதவராம். நகர வாழ்க்கையையே விரும்பும் அவர் பக்கத்து டவுனாகிய ராணிபென்னூரில் தம் குடும்பத்தை அமைத்துக் கொண்டாராம். ஆனால் அழகான கன்யாவுக்கு மட்டும் இயற்கையை ரசிப்பதில் வெகு மோகம். அதனால் இப்படி எப்பொழுதாவது அந்த அருவிப்பக்கம் இயற்கையின் முழு அழகை ரசிக்க வருவாளாம்.

அன்று பிரியா விடை பெற்றுப் பிரிந்தோம் இருவரும். இரவு கல்லூரி ஹாஸ்டலில் சட்டையைக் கழற்றும்போது பையிலிருந்து ஒரு மல்லிகை மொட்டு விழுந்ததைக் கண்ட என் அறை நண்பர்கள் ''அது எப்படி என் சட்டைப் பையில் வந்தது?'' என்று துளைத்தெடுத்து விட்டனர். என்னென்னமோ சொல்லி அவர்களிடம் தப்பித்துக்கொள்ள முயற்சி செய்தும் அவர்கள் 'யார் என்னுடைய கேர்ல் ஃப்ரெண்ட்' என்று தெரிந்து கொள்வதிலேயே குறியாக இருந்தார்கள். நான் சரியான பதில் சொல்லும் நிலையிலா இருந்தேன்? கன்யா சட்டென்று அணைத்துக் கொண்டதை நினைத்து நினைத்து அன்றிரவெல்லாம் பூரித்துக் கொண்டிருந்தேன்.

பிறகு அடிக்கடி — ஏன்? அநேகமாக வாரம் தவறாமல் — ஞாயிற்றுக்கிழமைகளில் சந்தித்துக் கொண்டோம். சந்தித்துக் கொண்டதெல்லாம் அதே அருவிக் கரையோரம் தான். அருவியின் சலசலப்பின் பின்னணி



''ஆஹாஹாஹா! கற்பனை பலமாகத்தான் இருக்கிறது. இன்னும் ஒரு மாதத்தில் பெரிய பரீட்சை வருகிறது. ஞாபகம் இருக்கிறதா, இல்லையா சார்...?'' என்றாள் விழிகளை உருட்டிக் கொண்டு.

''கன்யா மிஸ்...பரீட்சையை விட இந்தப் பரீட்சைதான் எனக்கு முக்கியம்'' என்று அவள் கன்னத்தில் செல்லமாகத் தட்டினேன்.

''ஒன்றுமில்லை...'' — வெகு சீரியஸாக ஆரம்பித்தவள், ''ராஜன்! நீங்கள் பரீட்சையில் பாஸ் செய்த பிறகு கல்யாணத்தைப் பற்றி யோசனை செய்வோம். வேலை கிடைத்த பிறகு கல்யாணம் செய்து கொள்வோம்'' என்று முடித்து விட்டு எழுந்து கொள்ள முயன்றவளைத் தோளை அழுத்தி உட்கார வைத்தேன்.

''இல்லை ராஜன். நேரமாகிக் கொண்டிருக்கிறது'' என்று எழுந்தவள், ''ராஜன்! அநேகமாக நாம் சந்திப்பது இன்றுதான் கடைசியாக இருக்கும்'' என்றாளே என் நெஞ்சில் நெருப்பை வாரிக் கொட்டினாற்போல்!

''என்ன இது கன்யா....?''— பதறிவிட்டேன் நான்.

''ராஜன் ! நான் சொன்னதும் சொன்னதுதான். என்மேல் உங்களுக்கு உண்மையான அன்பிருந்தால்......!''

''ஏன் இந்த விபரீத சந்தேகம் உனக்கு, கன்யா. உனக்காக.....''

''நீங்களாக ஒன்றும் செய்ய வேண்டாம். நான் சொன்னபடி மட்டும் செய்யுங்கள்.

ஹாஸ்டல் அறைக்குப் பறந்தோடிய என்னை ஒரு தந்தி பியூன்தான் வரவேற்றார்.

''சித்தப்பாவுக்கு அபாயம். உடன் புறப்படவும்.'' – சித்தி

தந்தி பெங்களூரிலிருந்து வந்திருந்தது. என்னைப் பெறாமல் ஆனால் பெற்றவருக்கும் மேலாக அன்பு காட்டி ஆதரித்து வளர்த்தவர்கள் என் சித்தப்பாவும் சித்தியும். அழுகையும், ஆதாத்யமுமாக நண்பர்களிடம்கூடச் சொல்லிக் கொள்ள நேரமில்லாமல், என் உடைமைகளை ஹாஸ்டலிலுள்ள என் வீட்டுக்குப் பார்சல் செய்யுமாறு பணித்து என் உற்ற தோழன் ஒருவனுக்குக் கடிதம் எழுதி வைத்துவிட்டு, ஸ்டேஷனுக்கு ஓடி வண்டியைப் பிடித்துப் பெங்களூர் போய்ச் சேர்ந்தேன்.

பிறகு இரண்டு மூன்று மாதங்கள் எமனுடன் போராடித்தான் என் சித்தப்பாவின் உயிரை மீட்டோம்.

நடுநடுவே எப்பொழுதாவது கன்யாவின் ஞாபகம் வரும். சில சமயம் அவளுக்கு விவரமாகக் கடிதம் எழுதலாமென்று தோன்றும். தைரியமில்லாமல் விட்டு விடுவேன். கடிதம் கன்யாவின் கைக்குக் கிடைக்காமல் வேறு யாருக்காவது கிடைத்துவிட்டால் என்னைப் பற்றி என்ன நினைப்பார்கள்? என்ற பயம். அதே அடிப்படையில்தான் கன்யாவிடமிருந்தும் நான் கடிதானை எதிர்பார்த்துக் கொண்டிருக்கவில்லை. ஆண் மகன் எனக்கே தைரியமில்லாத போது.... தவிரவும் கன்யாவுக்கு நான் பெங்களூரில் இருப்பது தெரியுமோ தெரியாதோ என்று சமாதானம் சொல்லிக் கொண்டேன். அவள் கடிதம் ஒன்றும் வரவும் இல்லை.

சித்தப்பாவின் உடல்நிலை காரணமாகத் தவிப்பும், கன்யாவின் நினைவினால் ஏற்பட்ட ஏக்கமுமாக இரண்டு மாதங்களைக் கழித்த எனக்கு மனத்துக்குத் தெம்பு ஊட்டும்படியாக ஒரு செய்தி அறிந்தேன். நான் என்னுடைய எம். எஸ்ஸி. பரீட்சையில் முதல் வகுப்பில் தேறிவிட்டிருந்தேன். என் கன்யா விரும்பியது நடந்து விட்டது. கன்யா இதை அறிந்தால் எவ்வளவு புளகாங்கிதம் கொள்

# மலர்கள்

அலைமகன்



மானிடர்க்கு மண்ணன்னை
மனமுவந்து சீதனமாய்த்
தேனிழைத்துத் தந்தநகை:
திகழ்கின்ற மென்மலர்கள்!

வானகத்துத் தாரகைகள்
வையகத்தில் பகற்போதில்
மாணழகைக் காட்டுதற்கு
மண்டியிட்ட ஒளிமலர்கள்!

வண்டுகட்குப் பசியாற்ற
வந்தகளைப் பாற்றுதற்குப்
பெண்டுகளாய்ப் பணிபுரியப்
பிறந்தவைதான் பனிமலர்கள்!

இயற்கையெனும் இளங்கன்னி
எழிலார்ந்த தோற்றத்தால்
மயக்குறப் புன்னகையை
மலரவிட்ட கவின்மலர்கள்!

இவ்வுலகைப் படைத்திட்ட
இறைவனுக்குத் தாளொற்றிச்
செவ்வையுறக் காதல்செயும்
சிறுதாணிக் கைமலர்கள்!

வான். உடனே ஓடிப் போய் நான் அவளைச் சந்தித்து இதைச் சொல்ல வேண்டும் என எண்ண எண்ண என் நெஞ்சம் பெருமித வெறி கொண்டு விம்மியது.

அன்றே சித்தப்பாவிடம் விடைபெற்றுக் கொண்டு ஹுப்ளிக்குக் கிளம்பிப் போய் என் பெற்றோர்களைப் பார்த்துவிட்டு மறு நாளே அங்கிருந்து நான் படித்த கல்லூரிக்குப் போய் சர்டிபிகேட்டுகளை வாங்கி வருவதாகச் சொல்லிவிட்டுக் கிளம்பினேன்.

ஆனாலும் நான் நேரே போகத் திட்டமிட்டது — போனது எல்லாம் ராணி பென்னூருக்குக் கன்யாவைச் சந்திப்பதற்காக. போகும் வழியில் எல்லாம் கன்யா வீட்டில், 'யார் நீ? உனக்கு என்ன வேண்டும்?' என்று என்னைக் கேட்க வந்தார்களானால், 'புரொபசரைப் பார்க்க வந்தேன். நான் அவர் மாணவன். கடந்த பரீட்சையில் முதல் வகுப்பில் தேர்ச்சி பெற்றதற்காகப் புரொபசருக்கு நன்றி சொல்ல வந்தேன்' என்று சொல்லி அந்தச் சாக்கில் கன்யாவைச் சந்திப்பது மட்டுமல்ல. அவளுடன் ஆலோசனை நடத்தி எங்கள் உறவையும் அவர்கள் வீட்டார்களுக்குத் தெரிவிக்கலாம் என்று எண்ணிக் கொண்டே கன்யாவின் வீட்டை அடைந்தேன்.

ஆனால் என்ன ஏமாற்றம்? அவர்கள் வீட்டுக் கதவில் தொங்கிய பெரிய பூட்டுத் தான் என்னை வரவேற்றது. என் மனமே இடிந்து சரிந்து விட்டது. இருக்கும்

அன்று ஒரு நாள்.

தினமும்போல் அமைதியைக் காண வேண்டி ஊரை விட்டு வெகுதூரம் தார் வார் ரோடில் 'வாக்கிங்' போய் விட்டு இரவு எட்டு மணிக்கு வீடு திரும்பிய என்னை, ''டேய், பழி! இது நியாயமா? எத்தனை நாழி என்னைக் காக்க வைச்சுட்டே. சௌக்கியமாடா டேய்?'' என்ற உற்சாகமான குரல் வரவேற்றது.

ஸ்தம்பித்து விட்டேன் நான்.

''அட! சந்துரு! டேய், எப்படா வந்தே? ஒரு கடிதாசு போடக்கூடாது?'' என்று கேட்டுக் கொண்டே ஆவேசமாகச் சந்திரமௌலியைக் கட்டிக் கொண்டேன்.

சந்திரமௌலி என்னுடைய பழைய நண்பன். ஆரம்பப் பள்ளியிலிருந்து பி.யூ.சி. முடிய நன்றாகப் படித்தோம். அவன் வீட்டில் நானொருவன், என் வீட்டில் அவன் ஒருவன் என்று அந்த அளவுக்கு ஓர் ஆத்ம அத்யந்தத்துடன்தான் பழகினோம். பி. யூ. சி. முடித்துக் கொண்டு டாக்டர் படிப்புக்காக அவன் பெங்களூர் போய் விட்டான். நான் ஹுப்ளியிலேயே பி. எஸ்ஸி. படிப்பைத் தொடர்ந்தேன். அநேகமாக நாங்கள் இருவரும் சந்தித்து ஆறேழு வருடங்கள் உருண்டோடி விட்டன. சந்திரமௌலி இப்பொழுது ஒரு முழுமையான டாக்டர்.

விடிய விடியப் படுக்கையில் படுத்துக் கொண்டு விடிவிளக்கு வெளிச்சத்தில் பழைய கதைகளையும், நடப்புக்களையும் பற்றிப் பேசிக் கொண்டிருந்தோம்.

# சக்திக்கும் வலிமைக்கும் போர்ன்விடா!

**சக்தியளிக்கும் போர்ன்விடா நாவினிமையிலே சிறந்ததோர் பானமாக விளங்குவதன் ரகசியம்—செழுமையான கோகோ!**






வளமையின் சிறந்த பொருள்களான கோகோ, மால்ட் சர்க்கரை, பால் இவையாவும் திட்டமாக கலக்கப் பெற்று தயாரிக்கப்பட்டதன் பலன்—தெம்பும் திடமும் தரும் ஒரு தீஞ்சுவை பானம் போர்ன்விடா. சூடான பாலிலே போர்ன் விடா கலந்து ஒரு கோப்பை அருந்துங்கள்...நாவுக்குத் தான் என்ன இனிமை, உடம்புக்குத்தான் என்ன வலிமை.

சக்திக்கும் வலிமைக்கும்—மற்றும் தீஞ்சுவைக்கும்

**கேட்பரீஸ் போர்ன்விடா**

2366 A TM

நுழைந்தேன். என்னைக் கண்டதும் சடக்கென்று எழுந்து வரவேற்கத் தாவி வந்தவனையும் மீறி ஊஞ்சலில் அவன் மனைவி ஸ்தானத்தில் உட்கார்ந்திருந்த பெண்ணின் மீது என் விழிகள் நிலைக்குத்தி நின்று விட்டன. உடலைச் சிலிர்த்து விட்டுக் கொண்டு மறுபடியும் பார்த்தேன். ஆம்! சந்தேகமே இல்லை. அவள் — என் நண்பனின் மனைவி ஸ்தானத்தில் என் காதலி கன்யாவேதான். ஐயோ! தலையில் இடி இறங்கினாற் போன்றதொரு திமீர் அதிர்ச்சிக்கு ஆளான எனக்கு அப்படியே என் கண் முன்னே அந்தக் கல்யாணப் பந்தல், என் நண்பன், அந்தக் கல்யாணப் பெண், சுற்றியிருந்த உறவினர்கள் எல்லோருமே தலைகீழாகத் தட்டாமாலை சுற்றுவது போன்ற ஒரு பிரமை. கால்களுக்குக் கீழே அப்படியே பூமியே நழுவுகிறதா என்ன?

திடுக்கிட்டு விழித்துக் கொண்டேன். சே! கண்டது கனவுதான். ஆனால் பயங்கரமான கனவு. இருந்தும் கால்களின் கீழே ஏனோ நழுவியது மாத்திரம் உண்மை. ஒன்றுமில்லை. ரயிலில் இட நெருக்கடியால் ஒரு பெட்டியின் மேல் கால்களை வைத்துக் கொண்டு உட்கார்ந்திருக்கிறேன். பெட்டியின் சொந்தக்காரர் தாம் இறங்கும் இடம் வந்தவுடன் தம் பெட்டியை இழுத்து எடுத்திருக்கிறார். அத்துடன் பயங்கரமான கனவும் சேர்ந்து கொண்டு மனுஷனை எப்படி உலுக்கி விட்டது? கண்களைக் கசக்கி விட்டுக் கொண்டு சுற்றிலும் பார்த்தால் அநேகமாக வண்டியில் இருந்த எல்லாருமே இறங்க ஆயத்தம் செய்து கொண்டிருந்தனர். சந்தேகத்துடன், "இது என்ன ஊர்?" என்று கேட்டேன் பொதுப்படையாக.

"ஓ ஓ..... ஹா.... சாருக்கும்.... இன்னும் தூக்கம் தெளியவில்லை போலிருக்கு. இது பெங்களூர் சார்" என்றார் ஒருவர்.

வண்டியை விட்டு இறங்கி ஓர் ஆட்டோ ரிக்ஷாவை வைத்துக் கொண்டு நண்பனின் கல்யாண வீட்டுக்குப் போகும் வழியில் எல்லாம் அந்தக் கனவைப் பற்றியே ஞாபகம். என்ன விபரீதமான கனவு? ஆமாம், எப்பொழுது தூங்கினேன்? ஆ! ஞாபகம் வருகிறது. ரயிலில் உட்கார்ந்து பழைய கதைகளை நினைத்துக் கொண்டிருந்த பொழுது நண்பன் கல்யாணத்துக்குக் கூப்பிட வந்த இரவு அவனுக்கு "ஸ்வீட் ட்ரீம்ஸ்" என்று வாழ்த்துக் கூறித் தூங்கியதை நினைத்துக் கொண்டேனே, அப்பொழுது தான் கண்ணை அயர்ந்திருந்து.

ஒரு வழியாகக் காலை எட்டரை மணி சுமாருக்குப் பெங்களூர் கன்டோன்மென்டில் உள்ள ஒரு கல்யாண மஹாலில் வந்து இறங்கினேன். முகூர்த்தம் பதினொரு மணி சுமாருக்குத்தான் என்பதால் பந்தலில் அவ்வளவு சுறுசுறுப்பு இல்லை. பந்தல் ஜோடனை மாத்திரம் என் கனவில் கண்டது போலவே தான். பின் என்ன? பெரிய டாக்டரின் கல்யாணமல்லவா? நண்பன் சந்திரமௌலி பந்தலில் தன் அண்ணன் தம்பிகளுடன் உட்கார்ந்து பேசிக் கொண்டிருந்தவன் என்னைக் கண்டு எழுந்தோடி வந்து வரவேற்றான். பிறகு தன் உறவினர் ஒருவரைக் கூப்பிட்டு என்னைப் பொறுப்பாகக் கவனித்துக் கொள்ளு



"ஞாயிற்றுக்கிழமை நீ என் வீட்டுக்கு வரும் போது, கூட இரண்டு கைகளை அழைத்து வா."

"பலே, சீட்டுக் கச்சேரியா?"

"ஊஹும்! அம்மாக் கச்சேரிக்குத்தான் ஆபீஸ் விஷயமா அரட்டை அடித்துக்கொண்டே ஆளுக்கு 500 அப்பளம் இட்டுக் கொடுங்கள்."

மாறு பணித்து விட்டு எனக்கும் சீக்கிரம் டிரஸ் செய்து கொண்டு மாப்பிள்ளைத் தோழனாகத் தயாராகும்படி உத்தரவிட்டான்.

குளித்து முடித்துவிட்டு 'டக்'காக டிரஸ் செய்து கொண்டு டிபன் சாப்பிடுவதற்காகக் கல்யாணக் கூடத்தில் நுழைந்த எனக்கு ஒரே ஆச்சரியப் பிரமிப்பு. அந்தப் பெண்கள் கூட்டத்தில் பட்டுப் புடவை சரசரக்கப் பரபரப்பாக அலைந்து வரும் பெண் — இல்லை! அந்த மோகினி யார்? எதிரே நெருங்கிச் சென்ற எனக்குச் சந்தேகம் நிவர்த்தியாகி விட்டது.

அதே துருதுருவென்று அலை பாயும் கருவண்டுக் கண்கள். தெளி தெளியாகச் சாட்டைப் பின்னல். கிறங்க வைக்கும் செழித்த பருவப் பூரிப்பு. கால் பாவாமல் நடக்கும் நடை.... அவள் வேறு யாருமில்லை.

"என் கன்யாவேதான்!"

நான் இரைந்தே சொல்லி விட்டதைக் கேட்டுச் சடக்கென்று பிரேக் போட்டு நின்றவள், "நீ...நீங்...களா....ஆ...?" — ஆச்சரியமாகக் கண்ணையும் அதைவிட அதிகமாக வாயையும் பிளந்தவள் மயக்கப் போடாத குறைதான்.

"கன்யா...! நீ...நீங்....இங்...எங்...?" என்று வாய் குழறிற்று எனக்கு.

"நான் கல்யாணப் பெண்ணுக்குச் சித்தி பெண். இப்போ கல்யாணப் பெண்ணுக்குத் தோழி.... நீங்கள்?" — நெருங்கி வந்து என்னை விழுங்கி விடுவது போல் பார்த்தாள்.

அப்பா! ஒரு நிம்மதி!

"நான் கல்யாணப் பையனுக்கு நெருங்கிய நண்பன். இப்போ மாப்பிள்ளைத் தோழன்" என்று கூறி அவள் அழகைப் பருகவில்லை. அவள் கழுத்தை நோக்கினேன். நல்ல வேளை! அங்கே நான் கட்டாத ஒன்று இல்லை.

நிம்மதி இரண்டாம் முறையாக.

பல பெரியவர்கள் கூடி அந்தக் கல்யாண வீட்டிலேயே ஒரு முடிவும் செய்து விட்டார்கள். என்ன முடிவு என்று கேட்கிறீர்கள்? போங்க சார்! எனக்குச் சொல்ல வெட்கமாக இருக்கிறது.

# அனுதாபத் தந்திகள்

கூத்தன்



**வா**ழ்த்துக் தந்திகளைப் போலவே அனுதாபத் தந்திகளுக்கும் ஏற்பாடு செய்யப் போவதாக மத்திய மந்திரி டாக்டர் ராம் சுபாக்சிங் கூறுகிறார். என்னைப்போல் வாழ்க்கையில் வெற்றிகளை அதிகம் காணாமல் தோல்விகளையே கண்டுள்ளவர்களுக்கு இது பெரிய வரப்பிரசாதமாகும். இனி எங்களுக்கும் தந்திகள் வர ஆரம்பிக்கும். அடுத்த வீட்டு அம்மாசாமிக்கு வாழ்த்துத் தந்திகள் வரட்டும், ஆனால் எனக்கு அனுதாபத் தந்திகள் வந்து கொண்டிருக்கட்டும்.

கீதை பிறந்த இந்த நாட்டிலே வெற்றியும், தோல்வியும் நிகரெனக் கொண்டு நாம் வேலை செய்ய வேண்டிய சமயத்திலே இதுவரை அனுதாபத் தந்திகள் இல்லாமல் இருந்தது ஒரு பெரிய தவறுதான் என்று தோன்றுகிறது. அர்ச்சுனனைப் பார்த்து, கண்ணன் கூறுவது போல், ''போரில் வென்றால் மண்ணுலகை அண்டிடுவாய்; தோற்றால் பொன்னுலகைப் பெற்றிடுவாய்'' என்பது போல, இனி ஒவ்வொரு தகப்பனாரும் தன் பிள்ளையைப் பார்த்து, ''பரீட்சையில் வென்றால், வாழ்த்துத் தந்தி கிடைக்கும்; இல்லையா அனுதாபத் தந்தி கிடைக்கும். ஆகவே கவலையின்றிப் பரீட்சை எழுது'' என்று சொல்ல முடியும்.

இந்த அனுதாபத் தந்திகள் எப்படி இருக்க வேண்டும் என்பதைப் பற்றித் தீர்மானிக்கும் போது, யாருக்குமே பழைய வாழ்த்துத் தந்திகளைப் பார்த்து, அதற்கு எதிர்மாறான விஷயங்களுக்கு அனுதாபத் தந்திகள் தயாரிக்க வேண்டும் என்று தோன்றும்.

உதாரணமாக, ''குழந்தை பிறந்ததா? என் சந்தோஷம்'' என்ற வாழ்த்துத் தந்தியைப் பார்த்து, ''தகப்பனார் காலமானதற்கு வருந்துகிறேன்'' என்றும், ''பரீட்சையில் தேறியதற்கு என் பாராட்டுக்கள்'' என்ற வாழ்த்துத் தந்தியைப் பார்த்து, ''பரீட்சையில் தோற்றதற்கு வருந்துகிறேன்'' என்று அனுதாபத் தந்திகள் தயாரிக்கத் தோன்றும்.

ஆனால் இந்தத் தந்திகள் உண்மை நிலையை எடுத்துக் கூறுவதாக இருக்காது. என்னைக் கேட்டால், வாழ்த்துத் தந்திகளோ, அனுதாபத் தந்திகளோ, தந்தி அனுப்புகிறவர்களின் மன நிலைமையைப் பிரதிபலிப்பதாக இருக்க வேண்டும்.

உதாரணமாக, வெகு நாட்கள் கல்யாணம் பண்ணிக் கொள்ள மாட்டேன் என்று பிடிவாதமாக இருந்த என் நண்பர் நாற்பது வயதில் கல்யாணம் பண்ணிக் கொள்ளுகிறார் என்று வைத்துக் கொள்ளுங்கள். இதற்குள், இருபத்தைந்து வயதிலேயே கலியாணமாகி, பதினைந்து வருட மணவாழ்க்கை ஏற்பட்டு விட்ட நான், அந்த அனுபவத்தைக் கொண்டு, அவருக்கு அனுதாபத் தந்திதான் அனுப்ப

முடியுமே ஒழிய, வாழ்த்துத் தந்தியா அனுப்ப முடியும்?

ஆகவே, இத்தகைய சூழ்நிலைகளுக்கு ஏற்ப, அநுதாபத் தந்திகள் தயாரித்து வைத்துக் கொள்வது நலம்.

இன்னும் ஒரு நல்ல யோசனை தோன்று கிறது. குடும்பக் கட்டுப்பாடு திட்டத்துக்காக என்ன என்னவோ செய்து கொண்டிருக்கும் அரசினர், இந்த அநுதாபத் தந்திகளை அதற்கு நன்கு பயன்படுத்திக் கொள்ளலாம்.

கீழ்க்கண்டது போன்ற சில தந்திகளை இனமாக அனுப்பி வைக்க ஒப்புக் கொள்ளலாம்.



''ஐயோ, பாவம்! கல்யாணமா பண்ணிக் கொள்ள உத்தேசித்திருக்கிறாய்? இன்னும் நிலைமை குடிமுழுகி விடவில்லை. தாலி கட்டுவதற்



குள் தந்தி கிடைத்தால் கலியாணத்தை ரத்து செய்துவிடு!''

''ஐயோ, பாவம்! எங்கள் எல்லாரையும் பார்த்தும் உனக்கு மூளை வரவில்லையே! கலியாணத்துக்கு இன்னும் இரண்டு நாட்கள் இருப்பதால் அது அவசியந்தானா என்று நினைத்துப் பார்!''

''நீ இத்தனை அசடாக இருப்பாய் என்று நான் நினைக்கவில்லை. இத்தனை வழிகள் இருந்தும், ஒரு குழந்தையைப் பெற்றுக் கொண்டு நிற்கிறாயே!''

''ஐயோ, பாவம்! இரண்டாவது குழந்தையா!''

''மூன்றாவது குழந்தையா? இந்தத் துக்கம் உனக்கு வரவேண்டாம்!''



இத்தனை எச்சரிக்கைகளுக்குப் பிறகும் நான்காவது குழந்தையைப் பெற்றுக் கொள்கிறவர்களுக்கு அநுதாபத் தந்தி அடிப்பது கூடத் தவறு என்று சொல்வேன்.

ஆக, இந்த அநுதாபத் தந்திகளில் இத்தனை அநுகூலங்கள் இருப்பதால், அதற்கு ஒரு வாழ்த்துத் தந்தி அனுப்பி வரவேற்கிறேன்!




# முடிவில்லாத முடிவு

காந்தன்

''வெங்கு! படத்தைச் சீக்கிரமா ரிலீஸ் செய்யணும். இன்னும் கால தாமதமாகிக் கிட்டே போனால் கட்டுப்படியாகாது'' என்றார் படாதிபதி. அவர் முகத்தில் கவலைக் குறிகள் அழுத்தமாகவே விழுந்திருந்தன.

''அதற்கென்ன ஸார், இப்போதுதான் நம்ம பட ரிலீஸுக்கு ஏற்ற அருமையான சூழ்நிலை. சட்டுப்புட்டென்று ரிலீஸ் செய்து விட வேண்டியதுதான்'' என்றான் வெங்கு.

''எந்தக் காரணத்துக்காக நல்ல சூழ்நிலை என்கிறாய்? பெரிய ஸ்டார் வாய்ப்புப் படங்கள் ஏதும் சமீபத்தில் வெளியாகப் போவதில்லை என்பதை நிச்சயப்படுத்திக் கொண்டு விட்டாயா?''

''அதுமட்டுமில்லே ஸார்! இப்போ ரிலீஸ் பண்ணினால் தியேட்டருக்குப் பஞ்சமில்லை. ஹிந்திப் படங்களுக்கும் பஞ்சம், ஆங்கிலப் படங்களுக்கும் கட்டுப்பாடு அதிகம். அதனால் இப்போ தியேட்டர்காரன்கள் எதைக் கொடுத்தாலும் ஓட்டுவான்கள்!''

''என்ன வெங்கு, ஒரு மாதிரி பேசறே?'' என்றார் படாதிபதி.

''பின்னே என்ன ஸார், நாம எடுத்திருக்கிற படத்திலே பாட்டுக்களே போதாது; இன்னும் இரண்டு சேர்க்கணும்னு யோசிச்சுக்கிட்டிருக்கேன். டைரக்டர் என்னடான்னா, இருக்கிற மூணு பாட்டிலேயும் ஒண்ணை எடிட்டிங்போது கட் பண்ணிடலாமான்னு சொல்றாரு! நீங்களே சொல்லுங்க!

பனியில்லாத மார்கழியா ?
மணியில்லாத ஆலயமா ?
சனியில்லாத ஜாதகமா ?
பாட்டில்லாத திரைப்படமா?

''வெங்கு! ரொம்ப ஜோர். ஒரு பாட்டே பாடிவிட்டாயே, சபாஷ்! பாட்டுக்களைக் குறைத்துப் புதுமையைப் புகுத்தலாம் என்று பார்த்தால் உனக்கு அது பிடிக்கவில்லையாக்கும்!'' என்றார் டைரக்டர்.

''பாட்டில்லாமல் படம் தயாரிக்க நினைக்கிறது, காற்றில்லாமல் சைக்கிள்விட நினைக்கிறது போலத்தான். அந்தப் படத்திலே வேறே 'டிராஜெடி'யே தேவையில்லை. படம் பார்க்க வர்றவங்களிலே பாதிப்பேர் பாட்டுக் கேட்கிற ஆசையிலேதான் வர்றாங்க. உங்களுக்கு முன்னாலேயே ஒருத்தர் பாட்டே இல்லாத ஒரு படத்தைத் தயாரித்து வெளியிட்டுக் கடைசியிலே ஆசாமி அட்ரஸே இல்லாம எங்கேயோ போயிட்டார்!''

''சரி, வெங்கு! நீ சொல்லுகிறபடியே செய்துவிடுவோம். இப்போ டைட்டில்ஸ் எல்லாம் எழுதிக் கொடுக்கணும். இன்னும் படத்தின் பேரையே நாம் நிச்சயம் பண்ணலே. என்ன பெயர் வைக்கலாம்?''

''அதையே வெச்சுடுங்களேன்!''

''எதை?''

''அதான், 'என்ன பெயர் வைக்கலாம்?' பெயரிலேயே நல்ல சஸ்பென்ஸ்!''

''என்ன வெங்கு! விண்டலா பேசறே?''

''சரி! இப்போ சீரியஸாவே சொல்றேன். என்ன பேரு வேணுமின்னாலும் வையுங்க. ஆனால் அதில் எழுத்துக்களின் எண்ணிக்கை ஒத்தைப் படையில் இருக்கணும்!''

''அதென்ன கணக்கு?''

''இரட்டைப் படையில் வெள்ளித் திரையிலே எதுவுமே வரக்கூடாது. பாட்டுக்களின் எண்ணிக்கை முதல் பங்கு பற்றுகிற நடிக நடிகையரின் எண்ணிக்கை வரை எல்லாம் ஒத்தைப்படையாகத்தான் வரலாம். படத்தின் பெயர்கூட ஒத்தைப்படையிலே தான் வைக்கணும். நம்ம அரோரா பிக்சர்ஸ் முதல் முதலிலே எடுத்த படம் இரட்டைப் படையினால்தான் 'பணா'லாயிடுத்து.



''உன்னுடைய மேரேஜ் ரிசப்ஷனுக்குக் கச்சேரியா, டான்ஸா? என்ன ஏற்பாடு பண்ணியிருக்கே ?''
''சம்பந்திச் சண்டைதான்! அவசியம் வாங்கோ !''

தெரியுமா? அப்புறம் அவங்களே இன்னொரு படம் எடுத்தாங்க. அதற்கு 'ஆசைக் கண்ணு'ன்னு பெயர் வைச்சாங்க. ஆனால் படத்திலேயும் பத்திரிகை விளம்பரங்களிலேயும் நடு எழுத்தை எடுத்துவிட்டு ''ஆசை கண்ணு'' என்று போட்டாங்க. அந்த ஒத்தைப்படைப் பெயரினாலே அதிர்ஷ்டம் அடிச்சது. படம் புடுச்சுக்கிச்சு! நூறு நாட்களுக்கு மேலே ஓடிப் படம் ரிக்கார்டை ஏற்படுத்தி விட்டது. ஆகையினாலே ஒத்தைப்படை விஷயம் மறந்துடப் போறீங்க! பாட்டுக்களின் எண்ணிக்கை இரட்டைப்படையாக வந்தால் அவற்றில் ஒரு பாட்டை 'ஹிட் ஸாங்'காகப் பண்ணி ரெண்டு தடவை படத்திலே பாடலாம். எண்ணிக்கை ஒற்றைப்படையாகிவிடும். நானே சில பாடல்கள் கம்போஸ் பண்ணியிருக்கேன். நம்ம படத்துக்கு எந்தச் சந்தர்ப்பத்துக்கும் பொருந்துகிற மாதிரி. ஆனால் டைரக்டர்தான் மேற்கொண்டு பாட்டு ஏதும் சேர்க்க வேண்டாம் என்று கூறுகிறார்.''

''வெங்கு! என்னிடம் ஒரு பாட்டுப் பாடிக் காட்டினாயே, அதை டைரக்டருக்குப் பாடிக் காட்டு'' என்றார் படாதிபதி.

''கதாநாயகியை விட்டுப் பிரிந்த கதாநாயகன் அவள் உருவத்தை மனக் கண்ணுலே பார்த்துப் பாடறான் ஸார். கதாநாயகியின் கவர்ச்சியான தோற்றம் அப்போது அவன் முன்னாலே தெரியும்...'' என்று கூறிவிட்டு வெங்கு பாடினான்:

தங்கக் கிண்ணம் ரெண்டு —, அதில்
தவிக்கும் உள்ளம் ஒன்று
மங்களமாய்ப் பாட்டுப் பாடும்
நேரம் இன்று....''

''சபாஷ். வெங்கு! இது 'ஹிட்'டாகி விடும்'' என்று கூறினார் படாதிபதி.

''இந்தப் பாட்டைக் கேட்டவங்க ஆண், பெண் யாராயிருந்தாலும் சதா 'ஹம்மிங்'கிலே பாடிக்கிட்டே யிருப்பாங்க!'' என்றான் வெங்கு.

''அதெப்படி இப்பவே சொல்ல முடியும்?''— என்றார் டைரக்டர்.

''பேஷாச் சொல்லலாம், டைரக்டர் ஸார்! ஏனென்றால் இந்தப் பாட்டு ஏற்கனவே ஐந்து வருஷங்களுக்கு முன்பு 'ஹிட்'டான ஸாங்தான். அதாவது அந்த ட்யூனைத்தான் அப்படியே காப்பி பண்ணியிருக்கேன். 'இன்ஸ்ட்ருமெண்ட்ஸோ'டு கேட்டுப் பார்த்தால் ரொம்ப ஜோரா யிருக்கும். அவசியமானா இலேசா ட்யூனை மாற்றிக்கலாம். இப்போ சினிமாப் பாட்டுக்கள் எல்லாமே இந்த ரீதியிலேதானே தயாராகிறது? தொழிற்சாலையிலே பொருள்களை உற்பத்தியாக்கிக் குவிக்கிற மாதிரி திரைகானத்திலும் இன்று 'மாஸ் புரொடக்ஷன்' தானே?'' என்றான் வெங்கு.

''உன் பாட்டு ரொம்ப நன்றாயிருக்கிறது'' என்றார் படாதிபதி.

டைரக்டரும் ஆமாம் சாமி போட்டார்.

''டைரக்டர் ஸார், கடைசிக் காட்சியைப் பற்றி நாம் இன்னும் யோசனை பண்ணலே யில்லையே! முடிவை எப்படிக் காட்டலாம் என்று நினைக்கிறீங்க?''

''கதாநாயகன், கதாநாயகி இருவரும் ஒன்று சேர்ந்துவிடும் காட்சியைக் காட்டி இருவரும் கைகோத்துக் கொண்டிருக்கும் போதே 'கட்டம்' போட்டுவிட வேண்டும்.''

''ஸார், ஸார்! நல்ல 'க்ளைமாக்'ஸிலே முடிக்கணும் ஸார்! அதாவது ஒன்று சேர்ந்துவிடுகிற சம்பவம் ஆஸ்பத்திரியிலே நடக்கணும்''

''அதெப்படி முடியும்?''

''ரொம்ப சுலபம் ஸார். எல்லாருமாக் கூடிக்கிட்டு லதாவின் கல்யாணத்தைப் பற்றிப் பேசிக்கிட்டிருக்காங்க. அப்பொழுது ஒரு நியூஸ் வர்றது. கதாநாயகன் தன்மீது கொண்ட சந்தேகம் காரணமாக மனமுடைந்த லதா பாலத்தின் மேலே ஏறி ஓடுகிற ஆற்று வெள்ளத்திலே குதிச்சுடறா. அவளைக் காப்பாத்திச் சிலபேர் ஆஸ்பத்திரியிலே சேர்த்திடறாங்க. அந்தச் சமாசாரம் தெரிய வந்ததும், கதாநாயகன், லதாவின் பெற்றோர்கள், அவள் தமையன், தங்கை எல்லோருமாகச் சேர்ந்து கொண்டு ஆஸ்பத்திரிக்கு ஓடுவாங்க. அது ஆஸ்பத்திரின்னு கூடப் பார்க்காம 'லதா, லதா'ன்னு கத்திக் கொண்டு கதாநாயகன் கட்டிலில் அவள் பக்கத்தில் அமர்ந்து அவள் தலையை மடியில் எடுத்து வைத்துக் கொள்வான். டாக்டர், நர்ஸ் எல்லோரும் இந்தக் கலாட்டாவுக்கும் பேசாம மௌனமா யிருப்பாங்க. கட்டுப் போடப்பட்ட கதாநாயகி கண் விழிக்கிற வரையில் எல்லோரும் கண் கலங்கிக்கிட்டிருப்பாங்க. அவள் கண் திறந்ததும் எல்லோரும் சிரிப்பாங்க. அடுத்த காட்சியிலே மாலை மாற்றல். காமெடியனும், அவன் காதலியும் இன்னொரு பக்கத்தில் மாலை மாற்றிக்கிடுவாங்க. கடைசியிலே 'ஜனகணமன' இருக்கவே இருக்கிறது!''

''வெங்கு! பிரமாதம். அப்படியே முடித்து விடலாம்!'' என்றார் டைரக்டர்.

''அதுமாத்திரம் இல்லே ஸார்! நம்ப ஜனங்கள் பார்த்துப் பழகிப்போன முடிவு: முடிவில்லாத முடிவு'' என்றான் வெங்கு.

(பேராசிரியர் நீலகண்டன் வீட்டு ஹால். வேலைக் கார நாகம்மாள் முதுகு வளையாமல் உடம்பு அதிராமல் பெருக்கிக் கொண்டிருக்கிறாள். நீலகண்டன் உள்ளேயிருந்து வருகிறார்.)

நீலகண்டன்: ஏய்! நாகம்மா! பெரிய சினிமா ஸ்டார்கள் மேக்கப் பண்ணிக்கிற மாதிரி பூ'போலப் பெருக்கறியே! தரைக்கு வலிக்காது. நல்லாக் குனிஞ்சு அழுத்தமாய்ப் பெருக்கு...!

நாகம்மா (பெருக்குவதை நிறுத்திவிட்டு): என்ன சாமி சொல்லுறே! ஆளுலப்பட்ட சினிமா இஸ்டாருங்களெல்லாம் என்கிட்டே பிச்சை வாங்கணும்னேன்!.. இந்த நாகம்மா..

நீலகண்டன்: போதும்! போதும்! நீ இப்போ நிக்கற 'போஸே' பிரமாதம்! ஏழைக் கதாநாயகிகளுக்கு வீடு கூட்டறதைச் சொல்லித் தர வாத்தியாராகக் கூடப் போகலாம்! டான்ஸுக்கு மாத்திரம் வாத்தியார் வைக்கிறாங்களே! இதுக்கும் வைக் கட்டும்!...

நாகம்மா: நீ ஒரு வார்த்தை சிபாரிசு பண்ணு சாமி. இந்தப் பேஜாரு புடிச்ச வீடு கூட்டுற வேலையை விட்டுட்டு...

நீலகண்டன்: முதலிலே அரை குறையாக விட்டிருக்கிற இந்த ஹாலைப் பெருக்கு! அப்புறம் விளக்குமாறும் கையுமாக ஆர்க் காட் ரோட் ஸ்டுடியோக்கள் வாசலிலே போய் நில்லு....

நாகம்மா: நான் ஏன் போய் நிக்கறேன்? கார் அனுப்பிச்சு என்னைக் கூட்டிக்கிட்டுப் போவாங்க!... எனக்கு நல்ல காலம் வரப் போகுதுன்னு கிளி ஜோசியக்காரன் சொல்லியிருக்கானே!

நீலகண்டன்: அவன் சொன்னதை நீ சரியாக் கவனிச்சிருக்க மாட்டே!

நாகம்மா: என்ன சாமி அப்படிச் சொல்லிட்டே?

நீலகண்டன்: ஆமா. 'நீ வேலை பார்க்கற வீட்டுக்காரங்களுக்கு நல்ல காலம் வரப் போகுது'ன்னு சொல்லியிருப்பான்.

நாகம்மா: ஏன்! உனக்கும்தான் நல்ல காலம்! மகனுக்குக் கல்யாணம் நிச்சயம் பண்ணிட்டே.... மகளுக்கும் பார்த்துட்டே....

நீலகண்டன்: நான் அதைச் சொல்லலே! உனக்குச் சினிமா உலகத்திலே விளக்குமாறு வாத்தியார் சான்ஸ் கிடைச்சுப் போய்த் தொலைஞ்சாத்தான் எங்களுக்கும் நல்ல காலம் வரும்! உன் நாக்கோட நோக்கம் பார்த்துக் காப்பியை வச்சிக்கிட்டுக் காத்திருக்க வேண்டாம் பாரு!...

நாகம்மா: அங்கே போனா ஆப்பிள் ஜூஸ் குடிக்கிறேன். அங்கே எல்லாம் அதைத்தான் குடிக்கணுமாமே! ...இனிமேல் காப்பி குடிச்சிருந்தாலேதான் மண்ணை வாரிப் போட்டுட்டானே அந்தப் பாவி!

நீலகண்டன்: சரியாச் சொல்லு!...நீ இனிமேலே....?

நாகம்மா: ஒரு வைத்தியன் கிட்டே வயித்து வலின்னு போயி மருந்து கேட்டேன். அவன் மருந்தைக் கொடுத்துட்டு, காப்பியே இனிமே குடிக்கக் கூடாதுன்னு சொல்லிப்பிட்டான்.

நீலகண்டன் (ஆவலுடன்): யாரு அந்த வைத்தியன்? எங்கே இருக்கான்?

நாகம்மா: ஏஞ்சாமி பதறுறே? உனக்கும் வயித்து வலி உண்டா?

நீலகண்டன்: சேச்சே!... இப்பவே அந்த வைத்தியரோட சிலை ஒண்ணு தயாரித்து மரினாவிலே ஒரு இடம் பார்த்து நிறுத்தணும். காவிய காப்பிய நாயகர்களிடையே இந்த காப்பி ஒழிப்பு நாயகருடைய சிலை அவசியம் இடம் பெற்றாக வேண்டும்.

நாகம்மா (புரிந்து கொள்ளாமல்): அவரு பேருகூட ஏதோ காலிங்க நாயக்கர்தானும்! ஜாம்பஜாருக்கு எதிர்த்தாப் போல இருக்கிற சந்தில் நுழைஞ்சு....

(பார்வதி உள்ளிருந்து வருகிறாள்)

பார்வதி: நன்னாத்தான் இருக்கு நீங்க அடிக்கிற கூத்து? அவளை வேலை செய்ய விடாமல் ஏதோ லெக்சர் அடித்துக்கொண்டிருக்கிறீர்களே?... நாகம்மா! சீக்கிரம் பெருக்கிட்டுக் குழாயடிக்குப் போ... அப்புறம் குழாயிலே தண்ணி நின்னு போயிடும்!

(நீலா வருகிறாள்)

நீலா: இந்தா நாகம்மா! அந்த வாயில் புடவைகளை யெல்லாம் மெதுவாகக் கசக்கி அலசினால் போதும்! பிசாசு மாதிரி தோய்த்துக் கல்லை உடைக்காதே!

நாகம்மா: சரிதாம்மா! நான் பிழியாமல் கூட வச்சுடறேன்! நீயே பிழிஞ்சுக்க.

(அப்படியே பாதி பெருக்கினதோடு உள்ளே போகிறாள்.)



ஒருமைப்பாடு வீடு

பார்வதி: ஏன் நீலா! நாகம்மாவே ரொம்ப அழகாய்த் தோய்ப்பாள்! அவளைப் போய்...

நீலா: உஷ்! எனக்குத் தெரியும் அம்மா! சில விஷயங்களிலே நாகம்மா நிச்சயமாக நாம் சொல்வதற்கு எதிர் மாறாகச் செய்வாள்! இப்போது அந்த வாயில் புடவைகளை அலறந்து தோய்க்க வேண்டும்! அதற்காகத்தான் நேர் எதிரிடையாகச் சொன்னேன்.

(உட்பக்கத்திலிருந்து 'மடேர் மடேர்' என்று துவைக்கும் சத்தம் கேட்கிறது.)

பார்வதி: சரி சரி...நீலா சொன்னது நிஜம் தான்! ஆனால் புடவை முழுசாக இருக்குமா?

நீலகண்டன்: அயர்லாந்து தேசப் பன்றிகளைப் பற்றி வேடிக்கையாகக் குறிப்பிடுவார்கள்'...இப்படித்தான்...

பார்வதி: அக்கம் பக்கத்திலிருக்கும் மனுஷாளைப் பற்றியே நம்மாலே தெரிஞ்சுக்க முடியல்லே! உங்கப்பா எங்கேயோ கடல் கடந்து, அயர்லாந்துக்குப் போய் நின்று கொண்டு, பன்றிகளைப் பற்றி 'காமென்டரி' கொடுக்க ஆரம்பிக்கிறார்.

நீலகண்டன்: வாஸ்தவம். ரொம்ப சரி!... இத்தனை நாழி பக்கத்திலே நின்று கொண்டிருந்த நாகம்மாளைப் பற்றிக்கூட நம்மாலே முழுதும் தெரிந்து கொள்ள முடியவில்லை! பார்வதி! அவள் பாதி ஹால் தான் பெருக்கினாள்! மீதியை நீ பெருக்கி முடிச்சுடு!

பார்வதி: கோபத்தைப் பார்க்கலே கோபத்தை!

நீலா: அப்பா! நீங்க அயர்லாந்து தேசத்துக்குப் போங்க அப்பா!

(வேணு வருகிறான்.)

வேணு: என்னது? அப்பா அயர்லாந்துக்குப் போகப் போகிறாரா? அமெரிக்கா, ரஷ்யா, ஜப்பான், ஃபாஷன் எல்லாம் மாறிப் போய் இப்போ 'அயர்லாந்து, ஹாலந்து, அண்டார்ட்டிக் தீவுகள்' என்று ஏதாவது புதுக் காம்பினேஷன் றோ?...

பார்வதி: அப்பா ஓரடி பாஞ்சா பிள்ளை மூணடி பாயறான் பேசறதிலே!... உங்க அப்பா ஏதோ கதை சொல்லத்தான் ஆரம்பிச்சிருக்கிறார்.

(போகிறாள்.)

வேணு: ஐ. ஸீ! நான் என்னவோ நினைச்சுட்டேன்!

நீலகண்டன்: நினைக்கிறதென்னடா! உங்க அம்மா இன்னும் ஒரு நிமிஷம் பேசாமலிருந்தால் நீ ஏரோடிரோமுக்குக் கிளம்ப டாக்ஸி பார்க்கப் புறப்பட்டிருப்பாய்!

நீலா: அப்பா!... நீங்க சொல்ல வந்த கதை....

நீலகண்டன்: கதை இல்லேம்மா! நடக்கற விஷயம்! அயர்லாந்து நாட்டுப் பன்றிகளைச் செல்வமாக வளர்ப்பார்கள். கொழு-கொழுன்னு இருக்கும். அந்த நாட்டின் முக்கியமான ஏற்றுமதிச் சரக்கு அது!

வேணு: ஃபாரின் எக்சேஞ் வியவகாரம்னு சொல்லுங்கோ!

நீலகண்டன்: ஆனால் அந்தப் பன்றிகளைத் கரையிலிருந்து கப்பலுக்குள், எக்சேஞ் பண்றதுக்குள்ளே அவர்கள் பிராணன் போய்விடும். ரொம்ப முரட்டு ஜன்மங்கள்! முன்னாலே ஓரடி விரட்டினால் பின்னால் இரண்டடி 'பாக்' அடிக்கும். அதற்காகத் துறைமுகங்களில் அந்தப் பன்றிகளைக் கரையைப் பார்க்க நிறுத்தி வைத்து முன்னால் விரட்டுவார்கள். அவைகள் சண்டித்தனம் பண்ணிப் பின்னால் நகர்ந்து தபதபவென்று கப்பலுக்குள் விழும். நீ நாகம்மாளை மெதுவாக அலசச் சொன்னதும் இந்த விஷயம் நினைவுக்கு வந்தது.

வேணு: எனக்கும் இப்போதான் நினைவுக்கு வருகிறது. கொஞ்ச நேரத்துக்கு முன்னாலே, ராமானந்த சட்டர்ஜி என்னை வாசலில் பிடித்துக் கொண்டு விட்டார். அவர் நம் வீட்டில் நேற்று சாப்பிட்ட விருந்தைப் பற்றி வாய்நிறைய வாய்நிறையாகப் பேச ஆரம்பித்துவிட்டார்.



*நீலகண்டன்:* தங்கமான மனுஷன்... பைதிபை.. அவர் கூட வீட்டைக் காலி பண்ணப் போகிறார் என்ற செய்தி வருகிறதே!

*நீலா:* இருக்காது! எனக்குத் தெரிஞ்ச வரை பல்தேவ் சிங்தான் டிரான்ஸ்பர் ஆகி விட்டாராம்! கிளம்பிவிடுவார் என்று கேள்விப்பட்டேன். அதுகூட நாகம்மா கொண்டு வந்த நியூஸ்!

*நீலகண்டன்:* அப்படீன்னு பழகின மனிதர்கள் என்ற முறையில் நாமும் கன்யாலாலும்தான் மிச்சமா?

(கன்யாலால் வருகிறார்.)

*வேணு:* வாங்கோ! வாங்கோ! உங்களுக்கு நூறு வயசு! இப்பத்தான் அப்பா உங்களைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்தார்.

*கன்யாலால்:* நமஸ்தே நீலகண்டன்ஜி! நமஸ்தே வேணுஜி! நானும் வீட்டிலே உங்களைப் பற்றித்தான் பேசிக் கொண்டிருந்தேன்! நேத்து உங்க மாதாஜி ஒரு சட்னி போட்டிருந்தாங்களே...ஆஹா!

*நீலா:* சட்னு மறக்க முடியாத விஷயம் தான்! அம்மா மிளகாயை வச்சா! புளியை வைக்க மறந்துட்டா!... நீங்க ரசிச்சீங்க! நாங்க தவித்தோம்!

*கன்யாலால்:* நீலகண்டன்ஜி! இனிமேல் என் லைஃபிலே இப்படிச் சட்னி எப்போ சாப்பிடப் போறேன்! மறக்க முடியுமா?

*நீலகண்டன்:* கன்யாலால்ஜி! நீங்க எங்கே போகப் போறீங்க? சட்னி எங்கே போகப் போகிறது! நம்ப பையன் கல்யாணத்தின் போது ஜமாய்த்து விடலாம்!

*கன்யாலால்:* எனக்கு அதிருஷ்டமில்லை புரொப்பசர்ஜி!... இந்த வாரமே நான் கேரளா போகிறேன்!

(சாட்டர்ஜியும் பல்தேவ் சிங்கும் வருகிறார்கள்)

*சாட்டர்ஜி:* நான்தான் மகாராஷ்டிரப் பிரதேசத்துக்கு உங்களை யெல்லாம் விட்டு விட்டுப் போகணுமேன்னு நினைச்சேன்! நீங்க கேரளா கிளம்பிட்டீங்களா?

*பல்தேவ்சிங்:* மிஸ்டர் சாட்டர்ஜி! கவலைப் படாதீங்கோ! உங்க மேற்கு வங்காளத்தை நான் போய்ப் பத்திரமாகப் பார்த்துக் கொள்கிறேன்.

*நீலகண்டன்:* ரொம்ப வேடிக்கையான சூழ்நிலை! நீங்க மூணு பேரும் ஒவ்வொருவராய் எங்கிருந்தோ வந்தீங்க! பழகினீங்க! இப்ப ஆளுக்கொரு பக்கமாகக் கிளம்பப் போறீங்க! வாழ்க்கைங்கறது ஒரு ரயில் பிரயாணம் போலேன்னு சும்மாவா சொல்லியிருக்கான்.

*சாட்டர்ஜி:* நாம் சேர்ந்து செய்த பிரயாணம் ரியலி வொண்டர்ஃபுல்! மறக்க முடியாததுதான்!... ஒரு குடும்பத்தைச் சேர்ந்த வங்க மாதிரிப் பழகினோம்.

*கன்யாலால்:* புரொபசர்ஜி! உங்களுக்குத் தான் மாற்றல் இல்லே. நீங்க காலேஜ் புரொபஸர். ஒரே ஊர்! ஒரே காலேஜ்...

*நீலகண்டன் (திடுக்கிட்டு):* வாட்? வாட்? நான் காலேஜ் புரொபசர்னு யார் உங்களுக்குச் சொன்னாங்க?

*சாட்டர்ஜி:* நீங்க காலேஜ் புரொபஸர் இல்லையா?... உங்களை நாங்கள் எல்லோரும் புரொபசர் ஜின்னுதானே கூப்பிடுகிறோம்?

*நீலகண்டன்:* பிரதர்ஸ்! நான் காலேஜ் புரொபஸர் இல்லே! மத்திய சர்க்கார் உத்தியோகஸ்தன். இந்த புரொபஸர்ங்கற பட்டம் என் பெயரோடு காலேஜ் நாட்களிலேயே ஒட்டிக் கொண்டு விட்டது. ஹாஸ்டல் ஸ்டூடண்ட்ஸ் என் சீட்டாட்டத் திறமைக்காக அளித்த பட்டம்.....இப்போ நான் புரொபசர் இல்லேன்னு தெரிஞ்சு போச்சு. உங்களில் யாரும் புரொபஸரோ?...பல்தேவ் சிங் நிச்சயமாக ஏதோ ஆட்டோமொபில் தொழில் சம்பந்தப்பட்டவராக இருப்பார்! பஞ்சாபிகளுக்கு அது பிடித்தமான விஷயம்.

*பல்தேவ்சிங்:* சாரி! நான் ஆங்கிலப் புரொபசர். இப்போது கல்கத்தாவில் ஒரு பிரின்ஸிபால் வேலை கிடைத்திருக்கிறது!

*நீலகண்டன்:* மை காட்! கன்யாலால்ஜி ஒரு இஞ்சினீயர் என்று சொன்னால்கூட நான் ஆச்சர்யப்பட மாட்டேன்.

*சாட்டர்ஜி:* நான்தான் இஞ்சினீயர். பூனாவுக்கு மாற்றலாகி யிருக்கிறது.

*கன்யாலால்:* நான்தான் மோட்டார் ஸ்பேர் பார்ட்ஸ் பிஸினெஸ்! கேரளாவிலே புது பிராஞ்சு திறக்கறாங்க. நான் போகிறேன்.

*நீலா:* வொண்டர்புல்! வொண்டர்புல்! உங்க பேச்சிலே இதுவரையில் நீங்கள் செய்கிற வேலைகள் சம்பந்தமாகப் பேச்சு அடிபட்டதில்லையே...

*பல்தேவ் சிங்:* அதற்கு அவசியமில்லே! நாம் எல்லோரும் அந்த எல்லைக்கு அப்பாலே போய் மனிதாபிமானத்துக்குத்தான் முக்கியத்வம் கொடுத்தோம். நான் வரட்டுமா? அப்புறம் பார்க்கிறேன்.

*கன்யாலால், சாட்டர்ஜி (எழுந்து):* நாங்களும் வருகிறோம்.

*நீலகண்டன்:* 'எங்கிருந்தாலும் வாழ்க' என்று ஒரு சினிமாப் பாட்டு உண்டு. அது போல் நம்மைப் பற்றியும் இப்படியே இந்தச் சிநேகம் மாறுமே, எங்கிருந்தாலும் வாழ்க அப்படீன்னு பாடணும்போலிருக்கு! குரல் தான் இல்லே!

*கன்யாலால்:* ஜீ! அன்பு என்கிற உணர்ச்சி இருக்கிறவரை குரல் எதற்கு? மொழி எதற்கு?

(மூவரும் போகிறார்கள். சில நிமிடங்களில் நாகம்மாள் உள்ளிருந்து வெளியே போக வருகிறாள்.)

*நீலகண்டன்:* ஏய் நாகம்மா! உனக்கு என்ன வேலே?

*நாகம்மா:* என்னு சாமி! துணி துவைக்கறேன், பாத்திரம் கழுவறேன்! வீடு பெருக்கறேன்! நீ கொடுக்கிற பத்து ரூபாய்க்கு இதுக்கு மேலே என்ன செய்யணுமாம்?

*நீலகண்டன்:* கரெக்ட்! நீ நம்ப வீட்டு வேலைக்கார நாகம்மா! இதையாவது தெளிவாகத் தெரிஞ்சுக்கறேன்....நீ செய்யற முக்கியமான வேலையைச் சொல்லலியே...

*நாகம்மா:* என்னு சாமி?

*நீலகண்டன்:* காப்பி குடிக்கிறது!....நீ நீ சும்மா குடி! எந்த வைத்தியன் சொன்னாலும் கேட்காதே. வயித்துவலி வரும். போகும்! நம்ம காப்பி வருமா?

*நாகம்மா:* நல்ல தமாஷ் பண்றே சாமி நீ!

(காட்சி முடிவு)




■ ராக்கெட் வேகம்!
■ எட்டு லட்சம் பிரயாணிகள்
■ காந்தன் தரும் கதை
■ 'திகைப்பு' வெகு சிறப்பு!

தங்களுடைய கல்கி 17–3–68ல் 'பணமா பாசமா?' திரைப்படம் பற்றிய விமரிசனத்தைப் படித்துத் திடுக்குற்றேன். 'இயக்குநர் திலகம் ஏமாற்றி விட்டார்' என்று ஒரே வரியில் எழுதியிருக்கிறீர்கள். ஆனால் இப்படத்தைக் காட்சிக்குக் காட்சி 'ராக்கெட் வேகத்'தில் கொண்டு செல்பவர் அவர்தான்.

சமீபத்திய 'ஜேம்ஸ் பாண்ட்' பாணி படங்களையெல்லாம் பார்த்து அலுத்துத் தமிழ்ப் படங்களே மோசம் என்ற அளவுக்கு வந்து விட்ட இந்தச் சமயத்தில், ''பணமா பாசமா'' ஓர் அருமையான குடும்பச் சித்திரமாக அமைந்திருக்கிறது.

சோழவந்தான்
16–3–68 எஸ். லக்ஷ்மிநரசிம்மன்

''இயக்குநர் திலகம் ஏமாற்றி விட்டார்'' என்ற போது அவரது மற்ற பல சிறந்த திரைப்படங்களுடன் ஒப்புநோக்குகையில் ''பணமா பாசமா'' ஒரு ஏமாற்றம் என்ற அர்த்தத்தில்தான் குறிப்பிட்டோம். அண்மையில் வெளியான தமிழ்ப் படங்கள் பலவற்றுள் ''பணமா பாசமா'' சிறந்த ஒன்று என்பதில் ஐயமில்லை. —ஆசிரியர்

தங்கள் 3–3–68 தேதிய பத்திரிகையில் ''மக்கட் குலத்தில் மறைந்த மகாமகக் குளம்'' என்ற கட்டுரையில் இங்குள்ள ''பஸ் ஆபரேட்டர்கள்'' அதிருப்திகரமாக நடந்து கொண்டது போன்ற நடையில் எழுதப்பட்டிருந்தது கண்டு வருந்தினேன்.

கும்பகோணத்தைச் சுற்றி ஆறு இடங்களில் தாற்காலிக பஸ் நிலையங்கள் அமைக்கப்பட்டிருந்தன. இந்த அனைத்து நிலையங்களிலிருந்தும் சுமார் 2000 நடைகள் நாள்தோறும் பஸ்கள் ஓட்டப்பட்டன. திருவிழா தினங்களில் 3000 டிரிப்புகளுக்கு மேலும் அதிகரிக்கப்பட்டன. எந்த ஒரு பஸ்ஸும் பழுதடைந்து, சேவைக்கு லாயக்கற்றது என்ற நிலை ஏற்படவேயில்லை. உரிமையாளர்களும் தொழிலாளிகளும் ஒரே குடும்பத்தினரே போன்று ஒன்றுபட்டு சுமார் எட்டு லட்சத்துக்கும் அதிகமான பஸ் பிரயாணிகளுக்கு நேர்மையுடன் சேவை புரிந்திருக்கிறார்கள்.

மோட்டார் வாகனச் சட்டப்படி பஸ் உரிமையாளர்கள் சாதாரண நாட்களில் வசூலிக்கும் கட்டணத்தை விட 50 சதவிகிதம் கூடுதல் கட்டணம் வசூலிக்கச் சட்டம் இடம் அளிக்கிறது. அரசாங்க ஆணையும் அவ்விதம் உள்ளது. இது ஏன் எனில் திருவிழாவுக்கு முன் கும்பகோணத்திலிருந்து புறப்படும் வண்டிகள் காலியாகவே செல்ல நேரிடும். அதேபோல் திருவிழாவுக்குப் பின் குடந்தைக்கு வந்து சேரும் பஸ்களில் பிரயாணிகள் இருக்க மாட்டார்கள். இந்த நஷ்டத்தை ஈடு செய்யும் வகையில் 50 சத விகிதக் கூடுதல் கட்டணம் வசூலிப்பது பொருத்தமான செயலேயாகும். இந்த முறை எல்லா ஊர்களிலும் சாதாரணமாகத் திருவிழாக் காலங்களில் கடைப்பிடிக்கப்பட்டு வருகிறது. ஆயினும் இங்குள்ள பிரபல பஸ் உரிமையாளர்களான ராமன் அண்ட் ராமன் கம்பெனியின் டைரக்டர் திரு என். காசிராமன், எம்.எல்.ஏ. அவர்கள் பொது மக்களின் நன்மையைக் கருதிக் கூடுதல் கட்டணம் விதிக்காமலேயே மக்களுக்குச் சேவை புரியவேண்டுமென விரும்பி மற்ற பஸ் உரிமையாளர்களையும் கேட்டுக் கொண்டு, சம்மதம் பெற்று ஒற்றுமையாகப் பணி புரிந்திருக்கின்றனர். சுமார் எட்டு லட்சம் பிரயாணிகளிடமும் 50 சத விகிதம் அதிகமாக வசூலிப்பதை மக்கட் சேவை என்ற முறையில் மனமார விட்டுக் கொடுத்திருக்கிறார்கள்.

மகாமகப் பெருவிழாவின்போது பஸ் சொந்தக்காரர்களும், அவர்களிடம் பணி புரியும் தொழிலாளர்களும் பாராட்டத்தக்க முறையில் இயங்கினரேயல்லாது, சந்தர்ப்பவாதிகளாகச் சுயநலக்காரர்களாக நடந்து கொள்ளவில்லை என்பது கண்கூடு. இது போன்ற சந்தர்ப்பங்களில் ஓரிரண்டு குறைகள் எங்காவது இருந்திருக்கலாம். இதில் கவனிக்க வேண்டுவது சேவை புரிபவர்களோ நூற்றுக்கணக்கானவர்கள் — பலனடைபவர்களோ பல லட்சம் மக்கள். ஆகவே அறியாமல் தங்கள் சக்திக்கு அப்பாற்பட்டு நடந்திருக்கக் கூடிய ஒருசில தவறுகளை மக்கள் பொருட்படுத்தியிருக்க மாட்டார்கள் என்பது உறுதி.

கும்பகோணம், என். சேதுராமன்,
டைரக்டர், ராமன் அண்ட்
21–3–68 ராமன் பிரைவேட் லிட்.

''வெள்ளித்திரை வைபவம்'' மிகவும் சுவாரசியமாயிருக்கிறது. நம் தமிழ்ப்பட உலகத்தை நையாண்டி செய்து கதைபோல் எழுதி வருகிறார், திரு காந்தன். நாங்கள் அந்தக் கட்டுரையை விடாமல் படிக்கிறோம்.

சென்னை–8 காந்தா,
18–3–68 சுந்தரி, விமலா

'சோமகன்' எழுதிய 'ஆறறிவின் திகைப்பு' என்ற சிறப்புச் சிறுகதை மிகவும் பாராட்டத்தக்க அளவில் அமைந்துள்ளது. நந்தகுமாரின் மறைவுக்குப் பின் ''ஆத்மா உண்டு என்று உணர்ந்ததில்தான் எத்தனை இதம்! அடுத்த ஜன்மத்திலாவது உங்களை அடைவேன், நந்தகுமார்'' என்று அம்பிகாவின் மமதையைப் போக்கிவிட்ட இடத்தில் ஆசிரியரது கைவண்ணம் மிளிர்கிறது.

திருச்சி–2
21–3–68 வேல்முருகன்

Printed & published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Kilpauk, Madras-10
Managing Editor: T. Sadasivam





அவர்கள் தோற்றத்திலே
ஒற்றுமையில்லை, ஆனால்
அவர்கள் அனைவரும்
உபயோகிப்பது
பரிபூரண ஒப்பனைச்
சாதனமான

க்ருக்ஸ்
# லாக்டோ-காலமைன்

இழைவான மென்மை வாய்ந்த
க்ருக்ஸ் லாக்டோ-காலமைன் எத்தகைய
குறைபாட்டையும் ஒளித்துவிடும்
பரிபூரண ஒப்பனைச் சாதனம்.
நாள்தோறும் சருமத்தின்மீது தடவுங்கள்
லாக்டோ-காலமைன். இதமான
ஆற்றும் குணமுள்ள காலமைன்,
செறிவூட்டும் செயல் திறனுள்ள
விட்ச் ஹேஸல் இரண்டும் இணைந்து
உங்கள் சருமத்திற்கு எழிலூட்டும்.



க்ருக்ஸ்
# லாக்டோ-காலமைன்

மாசில்லா அழகுக்கு!
மேலும் உங்களுக்கு உரிய அழகு
சாதனங்கள் லாக்டோ-காலமைன்
டால்கம் பவுடர் மற்றும் க்ரீம்.




களவிட்முடியாத க்ருக்ஸ் லேபிளும்,
க்ருக்ஸ் சின்னமும் இருக்கிறதா
என்று கவனித்து வாங்குங்கள்.
க்ருக்ஸ் இன்டர்ஃப்ரான் லிமிடெட், பம்பாய்-25.

CL. 72 TM

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon

இலங்கையில் 40 சதம்
தபால் செலவு தனி